


### லண்டன் சர்வகக்ஷி மகாநாடு.

சர்வகக்ஷி மகாநாட்டு அலுவல்சள் டிசம்பர் 29-ந் தேதி வரையில் ஒத்திவைக்கப்பட்டிருந்காலும் அந்தரங்கத்தில் ஆலோசனைகள் நடைபெற்று வருகின்றன. முக்கியமாக மிஸ்டர் ராம்ஸே மாக்டொனல்டு இதில் நடவடிக்கை யெடுத்துக்கொணடு வருகிறார். இன்று அவர் செக்கர்ஸில மிஸ்டர் வெட்ஜ்வுட் பென்னையும் மற்ற உயர்தர உத்தியோகஸ்தர்களேயும் வரவழைத்து மகாநாட்டில் நடந்துள்ள வேலையைப்பற்றியும் இனிச் செய்யவேண்டிய வேலையைப்பற்றியும் மகாநாட்டை உதவுவதற்குக் கவான்மெண்டார் என்னசெய்யக்கூடு மென்பதைப் பற்றியும் ஆலோசித்தனர். 29-ந் தேதி எல்லைப்புறத் ,னிக் கமிட்டி ஆலோசனை செபதது.

— —

### துருக்கியில் புதிய இயக்கம்.

துருக்கியில் மெனிமென் மாக்னி உதியா ஆகிய ஜில்லாக்களில் மத ஆட்சியை யுண்டுபண்ணும் நோககத்துடன் பிற்போக்கான இயக்கமொன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. ஸ்மிர்னாவில் குரான வாக்யங்களுடன ஒரு ஊர்வ ம் சென்றதில போலீஸ் படைகளுடன போராட்ட மேற்பட்டது. இதில் மூன்று கலகக் கக்ஷித தலைவர்கள் இறந்தனர். நானகாதவர் காயமடைந்து கைதுசெய்யப்பட்டார். போலீஸ் படையில் ஒரு உததயோகஸ்தர் இறந்தார். மற்றும் பல கான்ஸ்டேபிள்கள் இறந்தனர் பின்னர், மெனிமென், கோனியா, ஸமர்னா, இஸ்தாம்போல முதலிய விடங்களில் இதுவரையில் 1000 பேர்கள்போல் கைது செய்யப்பட்டிருக்கின்றனர் இதில பல ஷேக்குகள். டேவிஷ்கள், இமாமகள், பலஸ்திரீகள் ஆகியோரும் அடங்கி யிருக்கின்றனர். சங்கீதகத்த்ற்குரிய நடத்தையுள்ளஒரு பெரிய ராணுவப்படை முழுவதும் மென்மெனில் நேர்ந்த கலவரத்தை யநுசரித்து பாதுகாப்பில் வைக்கப்பட்டிருக்கிறது. மெனிமனுல் நேர்ந்த கலவரத்தில் பலா கொல்லப்பட்டனர்.

இக்கலகம் வகேதா தனித்து நடந்த தலலவென்றும், கெமால் ஆட்சியைக் கவிழ்க்க ஏற்பாடாகச் செய்யப்பட்டுள்ள பெரிய சதியாலோசனையிலேயே இது சேர்ந்த தென்றும் அதிகாரிகள் கருதுகின்றனர்.

நேற்றுதினம் :போல்ஃபாங்கி அரணமனையில் ஒரு முக்கியகூட்டம் முஸதபா கெமால் பாஷாவின் தலைமையின்கீழ் நடைபெற்றது. இதற்குப் பிரதம மந்திரி, உள்நாட்டு மந்திரி இஸமத் பாஷா, ராணுவ தளகர்த்தர் முதலிய பிரபல உத்தியோகஸ்தர்கள் வந்திருந்தனர். 8-மணி நேரம்போல் நிலைமையைப் பற்றி அவர்கள ஆலோசனை செய்தனர். பிற்போக்காளருக்கு விசேஷ தண்டனை விதிப்பதைப் பற்றி இவர்கள் ஆலோசனைசெய்தனர்.

———


தென்னமெரிக்காவில் பிரேஜீலின் குடியரசுத் தலைவர் பதவியை டாக்டர் டிடுலோவர்காஸ் ஏற்றுக்கொண்ட காட்சி.


ருமேனியா தேசப்பெண்சாரணர் சங்கத்தில் கௌர உத்யோகப் பதவி வகிக்கும் பிரின்ஸஸ் இலீயீனா பிரமாணம் செய்த பிறகு பாதிரியிடமிருந்து ஆசீர்வாதம் பெறும் காட்சி.

### சீனாவில் அதிக்ரமம்.

சீனாவில் தென்கிழக்கு ஹூபேயில் மலைப்பிரதேசத்தில் கத்தோலிக் பாதிரியாரானபாதர் மாாககஸ் பொதுவுடமையினர் ைையில் அகப்பட்டு மிகுந்த கஷ்டமடைந்தார். நவம்பர் மாதத்தில் இவர் இருப்பிடம் விட்டுத் துரத்தப்பட்டார். தமது புஸ்தகங்களையும் புனித பாத்திரங்களையும் எடுத்துக் கொள்ள வேண்டி அங்கு திரும்பிச் சென்றார். அவர் இரக்கமின்றி அப்பொழுது பலமாகத தாக்கபபட்டு சுண்ணாம்பினால் கண்தெரியாமல் செய்யப்பட்டது. கழுத்தில கயிர் கட்டப்பட்டு சிறிது தூரம் அவர் அழைத்துச் செல்லப்பட்டு மென்னியில் சுருக்குப் போடப்பட்டு முடிவில் பிரேத பெட்டியின்றி பூமியில புதைக்கப்பட்டார்.

— —

### பிரிட்டிஷ் ரஸ்தாப் போக்கு வரத்துச் சட்டம்.

இங்கிலாந்தில் புதிய ரஸ்தா போக்குவரத்துச் சட்டம் அடுத்த வியாழக்கிழமை தினம் அமுலுக்கு வருகிறது. இதன்படி ஓட்ட வேகத்தில் தடையேற்படுத்தி யிருப்பது ரதது செய்யப்படுவதுடன் மூன்றும் பேர்களிடம் கட்டாயமாக இன்ஷியூர் செய்ய வேண்டுமென்றும் விதிக்கப்படுகிறது. ஆபத்கரமாக மோட்டார் ஓட்டுவது, எச்சரிக்கைகளைப் புறககணிப்பது முதலியவற்றைக கவனிக்க மோட்டார் ஸைக்கிளில் செல்லும் விசேஷப் போலீஸ் படையொன்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஜனவரி முதல் தேதியில் ஆயிரம்பேர்கள் இவ்விதம் பந்தோபஸ்து வேலையிலிருப்பார்களென எதிர் பார்க்கப்படுகிறது. லண்டன் ஜில்லா ரஸ்தாக்களில் 300 பந்தோபஸ்துக் காரர்கள் போல் நிற்பார்கள்.

———

### பிரபல பிரிட்டிஷ் கைத் தொழில் தலைவா காலமானார்.

லார்டு மெல்செட் காலமாகி விட்டார். லார்டு மெல்செட்டின் புத்திரர்மிஸ்டர்ஹென்ரி மாண்டு இனி பாரனாகிறார். இவர் காமன்ஸ் சபையில கன்ஸர்வெடிவ் கக்ஷியங்கத்தினராக விருக்கிறார். இனி அவர் லார்டாக ஆகிவிட்டபடியால லிவர்பூலில் கிழக்கு டாகஸ்டெத்தில் காமன்ஸ் சபைக்கு இடைத்தேர்தல் நடைபெறுவதாக விருக்கிறது.

லேடி மெல்செட்டிற்கு மன்னரிட மிருந்தும ராணியாரிடமிருநதும் அநுதாபம் தெரிவித்து ஒரு தந்தி வந்தது. லார்டு மெல்செட்கைத்தொழிலுக்குச்செய்த அரிய வேலையைப்பற்றி மன்னர் அதில் குறிப்பிட்டிருந்தார். காலமாகும்பொழுது லார்டு மெல்செட்டிற்கு 62 வயது. கைத்தொழிலை நிலைமைக்கனுகுணமாகத திருத்தியமைப்பதை இவர் ஆதரிப்பவர். இவர் தலைவராக ஒரு

ந்த இம்பிரியல் மெடிகல் இன்ஸ்டியூட்டிற்கு 760 லக்ஷம் பவுன் மூலதனம். இவர் மற்றும் 12 கம்பெனிகளின் தலைவராகவிருந்தார். 30 கம்பெனிகளில் டைரெக்டராகவிருந்தார் 1906-ம் வருஷம் முதல் 1923-ம் வருஷம் வரையில் இவர் காமன்ஸ் சபையங்கத்தினராக விருந்தார். 1928-ல் லார்டாகச் செய்யப்பட்டார். யுத்தகாலத்தில் மராமத்து மந்திரியாகவும் பின்னர் சுகாதார மந்திரியாகவும் இருந்தார். லார்டு மெல்செட் யூதர் இயக்கத்தை ஆதரிப்பவர். சென்ற பத்து வருஷங்களாக யூதர் சங்க நிர்வாக சபையில சம்பந்தப்பட்டிருந்தார்.

---

### ஆர்ஜன்டைனா பூகம்பத்தில் 36 பேர்களுக்கு உயிர்ச்சேதம்.

ஆர்ஜன்டைனாவில் கார்டில் விராரியல் மலை உயர்விலிருந்த போமா நகரம் முழுவதும் பூகம்பத்தினால் நாசமாகிவிட்டது. 35 பேர்களுக்கு உயிர்ச்சேதம். 70 பேர்களுக்குக் காயம்.

---

### அமெரிக்காவுக்குத் திருட்டுச் சாராயம்.

நியூ லண்டன் செய்தியொன்று அறிவிப்பதாவது:— 'ஆட்ரிபி' என்ற பிரிட்டிஷ் கப்பலை கடலோரக் காவல் கப்பல் பிடித்திருக்கிறது. அந்தக் கப்பல் சிப்பந்திகள் பத்துப் பேர்கள் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். லக்ஷம் டாலர் பெறுமானமுள்ள சாராயத்தை அந்தக் கப்பலிலிருந்து காவல் கப்பல் கைப்பற்றியிருப்பதாகக் கூறப்படுகிறது.

---

### ஜாவா எரிமலை விபத்தில் 1300 பேர்களுக்கு உயிர்ச்சேதம்.

ஜாவா தேசத்தில் மெராபியில நேர்ந்த எரிமலை விபத்தில மொத்தம 1300 பேர்களுக்கு உயிர்ச்சேதமேற்பட்டிருக்கிறது. இதில் காணாமற்போயிருக்கும் 300 பேர்களும சேர்ந்தவர்கள். எரிமலையினின்று இன்னும் நீர்க்குழம்பு வெளி வந்து கொண்டிருக்கிறது. ஆனால் இந்தப் பிரதேசம் முழுவதுமகாலி செய்யப்பட்டிருக்கிறபடியால் இதில ஆபத்து அதிகமில்லையெனக் கருதப்படுகிறது.

---

### பிரின்ஸ் ஜியார்ஜுக்கு விபத்து.

பிரிட்டிஷ் மன்னரின் மூன்றாவது புத்திரரான பிரின்ஸ் ஜியார்ஜ் பெல்வாய்ர் வேட்டைக் கோஷ்டியுடன் வேட்டையாடிக்கொண்டிருந்தபொழுது கீழே தள்ளப்பட்டுப் பலமாக அடி விழுந்தது. மெலட்டன் மோப்ரேயிலுள்ள ஆஸ்பத்திரிக்கு அவர் எடுத்துச் செல்லப்பட்டார். அங்கு எக்ஸ்ரே எடுத்துப் பார்த்ததில் இடது தோளில் காயமேற்பட்டிருந்ததாகத் தெரிகிறது.

பிரின்ஸ் ஜியார்ஜ் இரவைச் சுகமாகக் கழித்தார். அவர் திருப்திகரமாக சவுக்கியமடைந்து வருகிறார். ஆனால் அவர் கையை தாராளமாக உபயோகிக்க இன்னும் சிறிதுகாலம் பிடிக்கும். அவர் ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டி ஸண்டிரிங்ஹாம் செல்லவில்லை.

---

### ஆகாய விமானத்தின் புதிய உபயோகம்.

இப்பொழுது தபால் விமானம் மூலம் அதிசயமான எல்லா



ஸ்பெயின் தேசத்தில் பார்ஸிலோனா நகரில் நடந்த கலவரத்தின்போது போலீஸ் குதிரைப் படையினர் தெருக்களில் காவல் காத்துவந்தனர்.



ஏககாலத்தில் ஒரு வட்டமான மேஜையில் 50 பசுக்களைக் கறக்க அமெரிக்காவில் யந்திரம் இயற்றப்பட்டிருக்கிறது. படத்தில் காண்கிறபடி கண்ணாடிப் படிகளில் அளக்கப்பட்டபிறகு குழாய்கள் மூலமாக பால் எடுத்துச் செல்லப்படுகிறது

வகை சாமான்களும் அனுப்பப்படுகின்றன. சர்வகக்ஷி மகாநாட்டு இந்தியப் பிரதிநிதிகளின் சவுகரியத்திற்காக வெற்றிலைக் கட்டு விமானம் மூலம் அனுப்பப்படுவது ஒரு விசேஷமாகும். இது இந்தியாவினின்று லண்டன் செல்லும்பொழுது இடையே கெடாமலிருக்கவேண்டி இக் கட்டுப் பத்திரமான பாதுகாப்புடன் அனுப்பப்பட்டிருக்கிறது.

சில தினங்கள் முன்தான் எகிப்திலிருந்து சமுத்திரத்தில் காணப்படும் நீண்ட நத்தைபோன்ற மீன்கள் இந்தியத தபால மூலம் லண்டன கொண்டுவரப்பட்டது. புருஸல்ஸ் கீரைகள் வாரா வாரம் லண்டன் கொண்டு வரப்படுகின்றன. விடியற் காலையில் பாரிஸில் சேகரிக்கப்படும் நாய்க்குடைகள் லண்டனில் காலை சாப்பாட்டு வேளைக்கு விமானம் மூலம் கொண்டு வரப்படுகிறது. 10 ஆயிரம் டென்னிஸ் பந்துகள் ஜெர்மனிக்கு இதன் மூலமனுப்பப்பட்டன. ஆனால் எல்லாவற்றையும் விட ஆச்சரியமானது சால்டன் நிலக்கரியும் அரைடன் இரும்பும் கொண்டுபோகப்பட்டதாகும்.

பிராணிகள் விமானம் மூலம் கொண்டு போகப்படுவது சர்வ சகஜமாக விருக்கிறது ஒருவிமானத்தில் ஒரு கூடி பல குரங்குகள், 50 கிளிகள் டச்சு கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து லண்டன் சமீபமுள்ள ஒரு பிராணி காட்சி சாலைக்குக் கொண்டுவரப்பட்டன. இரண்டுவருஷங்களுக்கு முன் பெரியசிங்கமொன்றுபிரான்ஸிலிருந்து அனுப்பப்பட்டது. இது ஒரு ஸ்பெஷல் கூட்டில் வைக்கப்பட்டுக் கொண்டுபோகப்பட்டது. இத்துடன் இதைத் தேர்ச்சிசெய்தவரும் சென்றார். அந்த சிங்கத்தினால் எவ்வித உபத்திரவமும் மேற்படவில்லை யென்பதாக ஒரு விமான உத்தியோகஸ்தர் கூறினார்.

---

### அமெரிக்காவில் மூன்று பிள்ளைகள் ஜோடி.

அதிசயமான சேர்ந்தாரப் போல பிறந்த மூன்று பிள்ளைகள் இரண்டு ஜோடிகள் அமெரிக்காவிலிருப்பதாக அமெரிக்க ஜெனிடிக் சங்கத்திற்கு இப்பொழுது அறிவிக்கப் பட்டிருக்கிறது. இந்த இரண்டு ஜோடி மூன்று பிள்ளைகளில் மூன்றும் எல்லாவிதங்களிலும் ஒன்றைப் போலவேமற்றொன்றும் இருக்கிறது. இவற்றில் ஒருஜோடிமூன்று பிள்ளைகள் ஜெர்மன் குடும்பமொன்றைச் சேர்ந்தவை. ஆல்பர்ட்டாவில் ஸ்டோனி பிளேயின் என்றவிடத்தில் இக்குடும்பத்தினர் இருக்கின்றனர். இந்த மூன்று பிள்ளைகளுக்கும் 10 வயதாகிறது. பார்ப்பதற்கு அழகான பிள்ளைகள். அவர்கள் பெற்றோர்களுக்குள்ள 14 குழந்தைகளில் இக்குழந்தைகளே கடைசியானவை. இந்தமூன்று பிள்ளைகளுக்குள்சிறிதுகூட வித்தியாசம் காணப்படவில்லை. ஆகவே இவற்றை அடையாளம்கண்டு பிடிப்பதற்காக இவற்றின் தாயார் ஒவ்வொரு குழந்தையின் கையிலும் தங்கச்சங்கிலி யொன்று போட்டு அதில் அதனதன் பெயரை வரைந்திருக்கிறார். எல்லாப் பையன்கள் தலைமயிரும் பிரதக்ஷணமான சுழியுடன் ஒரே வழியாகவளருகிறது. இக்குடும்பத்தில் வேறு யாருக்கும் இவ்விதம் மயிர் வளர்ந்திருக்கவில்லை புத்திசாலித்தனத்தைப் பரீக்ஷிக்க நடத்தப்பட்ட போட்டிப்பரீக்ஷையில் மூன்று பையன்களும் ஒரே விதமான மார்க்குகள வாங்குகின்றனர். அவர்கள் மூவரும் ஒரேவிதமான விளையாட்டுகளை விரும்புகின்றனர். பள்ளிக்கூடத்தில்மூன்றுபையன்களும கணக்கு நன்கு போடுகின்றனர். பாஷைஞானம் மூவருக்கும் குறைவாகவிருக்கிறது. மற்றொரு ஜோடி மூன்று பிள்ளைகள் இன்னும் குழந்தைப் பருவத்திலிருக்கின்றன. அவற்றிற்கு இரண்டு வயது தான் ஆகிறது. இந்தப் பையன்களும் ஒரே மாதிரியாகததான் இருக்கின்றன. ஆனால்பெற்றோர்கள் மாத்திரம் இவர்களுக்குள் அடையாளம் கண்டு பிடிப்பது சாத்தியமாகிறது. இந்த மூன்று பையன்களுக்கும் இடது கைவாக்காக விருக்கிறது. நடப்பதில் எல்லாம் பிற்போக்காக விருக்கின்றன. எல்லாக்குழந்தைகளுக்கும் சேர்ந்தாற் போலவே பற்கள் கிளம்புகின்றன.

# இந்திய வர்த்தமானம்

### ஸத்யாக்கிரஹ இயக்கம்.

நாடெங்கும் ஸத்யாக்கிரஹ இயக்க சமபந்தமாகப் பலர் கைது செய்யப்பட்டனர். 25-ந் தேதி யன்று பம்பாயில் ஒரு ஆங்கிலோ இந்தியப்பத்திரிகை வெளியிட்ட விஷயங்களைக் கொண்டு போலீஸாரால் பல வீடுகள் சோதனை யிடப்பட்டுப் பல தஸ்தாவேஜுக்களும காகிதங்களும கைப்பற்றப்பட்டன. ஜனுப்கள் மஹாலி, தோஸ்து மகமது, ஸ்ரீமான்கள் மேனன், சாமியும் கைது செய்யப்பட்டவர்களைக் காணச் சென்றபோது கைது செய்யப்பட்டார். ஸ்ரீமான் ஏகாமபர அய்யர் குடல் அனுபந்த வியாதியால் வருந்துவதால் ரணசிகித்ஸைக்காக ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செலலப்பட்டார். ஜனுப் மஹர் அலியும் தேக அசௌக்கியமாக விருப்பதாகத் தெரிகிறது. பம்பாயில் இவர்கள் கைது செய்யப்பட்ட விஷயமாக ஜனங்கள்க் ஒருவரை உளவை வெளியிட்டதாக மெம்பர்கள் கைது செய்யப்பட்டனர். போலீஸார் கூட்டத்தைத் தாக்கிக்கலைத்தனர். 200 பேர்கள் காயமடைநதனர். கூர்ஜரத்தில் வரிகொடா இயக்கம் நடந்து வருகிறது. ஆமதாபாத் முனிசிபாலிட்டி சார்பில் நடத்தப்படும் பாடசாலைகளை ராஜீயத் தலைவர்கள் கைது செய்யப்படுகையிலும் தண்டிக்கப்படுகையிலும் பஹிஷ்கார வாரத்திலும் மூடப்பட்டு வருவதால் பம்பாய்க் கைது செய்யப்பட்டனர். சிரியாவிலும் சிர்ஸியிலும் கூட்டம் போலீஸாரால் தாக்கிக் கலைக்கப்பட்டது. சிலர் காயமடைந்தனர்.

பஞ்சாப் மாகாணத்திலும் இபக்க சம்பந்தமாகப் பலர் கைது செய்யப்பட்டனர். • அரசிறை அவசரச்சட்டம் எல்லா ஜில்லாக்களிலும் அமுல் நடத்தப்படும். ஐக்கிய மாகாணங்களிலும் 30 ஜில்லாக்களில் இந்த அவசரச் சட்டம் அமுலுக்கு



திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி கோயில்முன் தேசியக்கொடி வணக்கத்தைப் போலீஸாா தடைசெய்த காட்சி. ஒரு போலீஸ் உத்யோகஸ்தர் தேசியக்கொடியைக் கையில் வைத்துக்கொண்டிருக்கிறார். (உள்படம்) அன்று கைதுசெய்யப்பட்ட தமிழ்நாடு காரிய சபைத் தலைவர் ஸ்ரீமான் சத்யமூர்த்தி.

P.P.B,

ஏகாம்பர ஐயர், பஹிஷ்காரக் கமிட்டியைச் சேர்ந்த ஸ்ரீமான் மூல்ராஜ் கர்ஸன்தாஸ் முதலியோர் உள்பட 23 பேர்கள் கைது செய்யப்பட்டனர். இவர்கள் காங்கிரஸ் காரியத்தைபம்பாயில்பிரதானமாகவிருந்து நடத்திவந்ததாகக் கூறப்படுகிறது. இவர்கள் கிரிமினல் லாதிருத்தச் சட்டப்படி கைது செய்யப்பட்டிருக்கின்றனர். 'பம்பாய் கிராமிகள். ஆபீசைச் சேர்ந்த ஸ்ரீமான் ஸி. கே. நாராயண சந்தேஹித்துத் தாக்கினார்கள்.

பம்பாய் முதலிய பல விடங்களிலும் மறியல் நடத்தப்பட்டு வருகிறது. பலர் கைது செய்யப்பட்டனர். 28-ந்தேதியன்று தேசியக்கொடி வணக்கம் தடை செய்யப்பட்டு அஸாத்மைதானத்தில் காலையில் போலீஸ் பந்தோபஸ்துகள் வைக்கப்பட்டன. யுத்தசபைத் தலைவி ஸ்ரீமதி ஸ்நேஹலதா ஹஜாத் 12 தொண்டர்களுடன் அங்கு வந்து சேர்ந்தார். யுத்தசபை கவர்ன்மெண்டார் அப்பாடசாலைகளுக்குக் கொடுத்து வந்த கிராண்டு தொகையை நிறுத்தி விட்டனர். ஆமதாபாத் சுதேசி சபை இந்நாட்டிலுள்ள சீமை ஜவுளிகளை வாங்கி அந்நிய நாட்டில் விற்றுவிட ஒரு திட்டம் தயாரித்து வருகிறது. காராச்சி முதலிய நகரஙகளிலும் பலர் கைது செய்யப்பட்டனா.

தார்வார் தாலுகாவில் பிரபாத் பேரிகள் தடைசெய்யப்பட்டும் நடந்துவருவதால் பலர் வரும். கான்பூர் ஹிந்துஸ்தானி ஸேவாதளம சட்டவிரோதமான சபை யென்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. டில்லி, லக்ஷ்மணபுரி முதலிய பல நகரங்களிலும் • இதர மாகாணங்களிலும் இயக்க சம்பந்தமாகப் பலர் சிறை சென்றனர்.

சென்னையில் தமிழ் ஜில்லாக்களில் பலர் கைது செய்யப்பட்டனர். கோயமுத்தூரில் சென்ற மாதம் 25-ந்தேதி போலீஸார் ஒரு பொதுக்கூட்டத்தைத்

தாக்கிப் பலருக்குக்காயமுண்டு பண்ணினார்கள் இது விஷயமாகக் கண்டனக் கூட்டமும் நடந்தது. கோவையில் 144 பிரிவுதடையுத்தரவு 27-12-30 லிருந்து இரண்டு மாதம் வரையில் போடப்பட்டிருக்கிறது. ஆந்திர ஜில்லாக்களிலும் கேரளத்திலும் இயக்க சம்பந்தமாகப் பலர் கைது செய்யப்பட்டனர்.

சென்னை நகரில் 28-ந்தேதி தேசீயக்கொடி வணக்கம் போலீஸாரால் தடுக்கப்பட்டு ஸ்ரீமான் ஸத்யமூர்த்தி கைது செய்யப்பட்டார். அவருடைய வழக்கு விசாரணை 8-ந்தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. தமிழ் ஜில்லாக்களில் பல நகரங்களிலும் தேசீயக்கொடி வணக்கம் நடந்து பலர் கைது செய்யப்பட்டனர்.

---

### ஸ்ரீமான் படேலின் தேக நிலை.

இந்தியா சட்டசபை மாஜித் தலைவர் ஸ்ரீமான் படேலின் தேகநிலையைப் பரீக்ஷித்துப பார்க்க டாக்டர் பி. டி. படேலும் ஆர். வி. படேலும்கோயமுத்தூர் ஜெயிலுக்குப்போய் ஸ்ரீமான் படேலைப் பரிசோதனை செய்தனர். ஸ்ரீமான் வி. ஜே படேல் மலச்சிக்கல், விரைவாதம் (ஹெர்னியா) உள்ளேயும் வெளியேயும் பத்தப்பெருக்கையும் உண்டாக்கும் மூல உபத்திரவம், ரத்தக் கொதிப்பு இவற்றால் மிக்க துர்த்தசையில் இருப்பதையும் மிக்க எடைகுன்றிப் போயிருப்பதையும், ஸ்ரீமான் படேலின தேகத்தின் இடது பக்கம் ஸ்மரணையற்று அதிக வலி கொடுப்பதையும், நடுக்கலெடுப்பதையும், அடிக்கடி மயக்கத்திற்குள்ளாவதையும், கண்டு அவர்கள அவருக்கு உடனே சிகிச்சை செய்யப்பட வேண்டுமென்றும் அவரது நிலைமை மிக்க கவலைக்கிடமானதாக இருப்பதாகவும் நினைக்கின்றனா. ஸ்ரீமான் படேல் உணவை அரைததுண்ண முடியவில்லை என்றும் அவர் உட்கொள்ளும் உணவு சரியாக ஜீர்ணமாவதில்லை என்றும் கூறப்படுகிறது. அவருக்கு இடது புற அடிவயிற்றில் வலியெடுக்கிறது. இதைக் குறித்து உடனே ஆராயவேண்டும். எக்ஸ்ரே பரீக்ஷைக்கும் இதர பரீக்ஷைகளுக்கும் அவசியமான வைத்திய சிகச்சைக்கும் ரணசிகிச்சைக்கும் சரியான வசதிகள் இல்லை என்று வைத்தியர்கள் அபிப்பிராயபபடுகின்றனர். அவருக்கு எச்சமயத்திலும ரணசிகிச்சை செய்யவேண்டிய அவசியமேற்படலாம்.

அவருடைய வியாதியைப் பூரணமாக ஆராய்ந்து நிபுணர்களைக்கொண்டு வைததியம் செய்வதற்குச் சௌகரியமான நிலைமையில் இந்தியாவிலோ ஐரோப்பாவிலோ அவரை உடனே வைக்க வேண்டுமென்று இருவரும் வியக்தமாக அபிப்பிராயப்படுகிறார்கள்.

பிறகு இரு டாக்டர்களும் பாலக்காட்டில் சென்னைக்கவர்ன்மெண்ட் சட்ட மெம்பரைக் கண்டு தங்களுடைய அபிப்பிராயங்களைத தெரிவித்துச் சென்றனர்.

---



பாட்னாவில் நடைபெற்ற கீழ்த்திசை ஆராய்ச்சி மகாநாட்டுத் தலைவர் ராவ் பகதூர் பண்டிட் ஹிராலால் P.P.A.



பாட்னாவில் நடைபெற்ற கீழ்த்திசை ஆராய்ச்சி மகாநாட்டு வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீமான் கே. பி. ஜயஸ்வால் P.P.A



பம்பாய் ஸ்வதேசிக் கடைகளில் ஸ்திரீகள் கதர் ஆடைகள் வாங்கும் காட்சி. P.P.A



ஸர் லலுபாய் சமல்தாஸால் பம்பாய் பாந்த்ரா ஸ்வதேசி பஜார் திறந்துவைக்கப்பட்டபோது எடுத்த படம். மிஸஸ் பெரின் காப்டனும் லலுபாயும் படத்தில் காணப்படுகின்றனர். P.P.A.

### ஒருபெரியாரின் உண்ணா விரதம்.

பூனா ஜவுளி வியாபாரிகளில் 50 பேர்களாவது சீமைத்துணி வியாபாரத்தை அறவே விட்டு விடும் வரையில் துறவிபோல் வாழ்ந்து உண்ணாவிரதமிருந்து வருவதென்று ஸ்ரீமான் கிருஷ்ணாஜீ ரானடே செய்து கொண்டிருக்கும் பிரதிக்ஞையானது சியத்தில் பூனா வியாபாரிகள் போதிய சிரத்தை காட்டாததன் காரணமாகச் சென்ற 20-ந் தேதி உண்ணாவிரதத்தை ஆரம்பித்தார். பூனாவில் இப்பொழுது குளிர் அதிகமாக இருந்தும் இடுப்பு வேஷ்டியுடன் அவர் புதாவார் சௌக்கில் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்திருக்கிறார்! நகரில் மிகுந்த பரபரப்பை உண்டு பண்ணியிருக்கிறது நூற்றுக் கணக்கானவர்கள் தினம் போய் அவரைப் பார்த்து வருகிறார்கள். பைசாநிதி ரானடே என்றழைக்கப்படும் அவர் சுதேசியத்தில் அவருடைய நண்பர்களிற் பலர் அவர் கோரும் 50 வர்த்தகர்களிடம் சீமைத் துணி வியாபாரம் செய்வதில்லையென்று பிரதிக்ஞைபெற முயற்சி செய்து வருகிறார்கள். ஸ்ரீமான் ரானடே விருத்தரானதால் அவருடைய தேகஸ்திதி என்னவாகிவிடுமோ வென்று அவர்கள் கவலைப்படுகிறார்கள். அவர் ஜலத்தையே உட்கொண்டுவருகிறார்.

---

### ஸ்ரீமான் விநாயக தாமோதர சவர்க்கார்.

1924ம் வருஷத்தில ஸ்ரீமான் விநாயக தாமோதர சவாக்கார் விடுதலை செய்யப்பட்டார். விடுதலை செய்யப்படுகையில் அவர் 5 வருஷகாலத்திற்குராஜ்ய விஷயங்களில் கலந்து கொள்ளக் கூடாதென்றும், அனுமதியில்லாமல் ரத்னகிரி ஜில்லாவை விட்டுப் புறப்பட்டுச் செல்லக் கூடாதென்றும் நிர்ப்பந்தங்களுக்குட் படுத்தப்பட்டிருந்தார். இக்காலம்4-1-31 யன்று தீர்ந்து விடுகிறது. தற்பொழுது இந்த நிர்ப்பந்தங்கள் இன்னும் 2 வருஷகாலத்திற்கு அமுலில் இருக்கும்.

---

### வெடிகுண்டு விபத்துகள்.

டில்லி சென்டிரல் ரெயில்வே ஸ்டேஷனில் டிஸம்பர் 26-ந் தேதி 2-வது வகுப்புப் பிரயாணிகள் தங்கியிருப்பதற்கான அறையில் ஒரு மூட்டை காதியற்றுக் கிடந்தது. அதில் ஒரு மேற் சட்டையும் படுக்கையும் இருந்தன. இந்த அறையின் ஏவலாளி அவற்றை அப்புறப் படுத்திக்கொண்டிருந்தான். அவன் அதை மின்சார ஏற்றத்தில் (லிப்டில்) ஏற்ற விருந்த சமயத்தில் வெடிகுண்டிருந்த ஒரு சிகரெட் பெட்டி மேல்சட்டையிலிருந்து கீழே விழுந்து வெடித்தது மின்சார ஏற்றத்தில் வேலை செய்யும் சிறுவனின் கைகளும் சிதறுண்டு போயின. அவன் பிறகு ஆஸ்பத்திரியில இறந்து விட்டான். 2 தொழிலாளர் பலமாகக் காயமடைந்தனர். 2 வது வகுப்புப் பிரயாணிகள் தங்குவதற்கான அறையிலிருந்த ஒருவர் கைது செய்யப்பட்டுப் பிறகு விடுதலை செய்யப்பட்டார்

ஆமதாபாத்தைச் சேர்ந்த ரத்னபோல் என்ற விடத்திலுள்ள தையற்காரர் ஒருவரின வீட்டில் வெடி குண்டைப் போன்ற ஒன்று திடீரென வெடித்து அந்த வீடுமுழுவதும் புகை சூழ்ந்து கொண்டது. அந்த வீட்டுக்காரரான தையற்காரரும், பாபு என்ற மறியல்காரரும் அந்த வீட்டுக்குள் நுழைந்ததும் இந்த வெடி சப்தம் கேட்டது. மறியல்காரரின் இரண்டு கைகளும் கண்ணும் பலத்த காயமடைந்தன. மற்றொருவருக்கு மூன்று விரல்களும் போய்விட்டன. போலீஸார் உடனே அங்குவந்து காயமடைந்தவர்களை ஆஸ்பத்திரிக்

(27-ம் பக்கம் பார்க்க.)




சாமான் வாங்குபவர்:—ஐயா, கடைக்காரரே, என் சாமானைக் குறைவாகக் கொடுக்கிறீர்கள்?

கடைக்காரன்:—உங்களுக்குச் சுமப்பதற்குக் கஷ்டம் தோன்றுது.

கடைக்காரன் அவனிடம் பணம் வாங்கி எண்ணிப் பார்த்து, "ஐயா, குறைவாகப் பணம் கொடுக்கிறீர்களே?"

சாமான் வாங்கவந்தவர்:—தங்களுக்கு எண்ணுவதற்கு சிரமம் தோன்றுது.

---

மனைவி "காலை முதல் மாலை வரையில்உழைத்துச் சமைத்துக் கொட்டுகிறேன். எனக்கு பதிலாக என்ன கிடைக்கிறது? ஒன்றும் கிடையாது"

கணவன். 'நீ அதிர்ஷ்டசாலி. எனக்கோ வென்றால் அஜீர்ணமுண்டாகிறது"

---

தந்தை, "பையா, எனக்கு வயதாகிவிட்டது. வியாபாரத்திலிருந்து விலகி ஓய்வெடுத்துக்கொண்டு எல்லாவற்றையும் உன்னிடம் ஒப்புவிக்கலாமாவென்று எண்ணுகிறேன்!"

தநயன் "அவசரமில்லையப்பா, இன்னும் சில வருஷங்களுக்குக் கம்பனியைக்கவனித்துக்கொள். நாமிருவரும் சேர்ந்து ஓய்வெடுத்துக்கொள்ளலாம்."

---

முதல் நண்பன் "சாதாரணமாக உரக்கப் பேசுகிறவர்கள் மடையர்கள்"

இரண்டாவது நண்பன், "மெதுவாகப் பேசு, நான் செவிடனல்ல"

---

ஒருவன் சாதாரண கெடிகாரம் ஒன்றை ரிபேர் செய்யும்படியாகக்கொடுத்து, "நான் செய்த தப்பிதம் தான். கெடிகாரத்தைக்கீழே போட்டுவிட்டேன்" என்றான்.

கெடிகாரம் குறைந்த விலைக்கு வாங்கப்பட்ட கெடிகாரம். அதைக் கையிலெடுத்து ரிபேர் செய்பவன் திருப்பித் திருப்பிப்பார்த்துவிட்டு, "கீழே விழுந்த கெடிகாரத்தை மீண்டும் எடுத்துக் கொண்டு வந்தது மற்றொரு தப்பிதம்" என்றான்.

---

கனவான், "நான் வெளியில் போயிருக்கும் போது யாராவது வந்தார்களா."?

வேலையாள் "ஆமாம். வெங்கிடேசன் வந்தார்."



லண்டன் ஸினிமா ஸொந்தக்காரர் ஸாம் பர்னியின் குமாரிக்கும் லண்டன் வர்த்தகருக்கும் விவாகம் நடந்தபோது ஸினிமாப் படங்கள் பிடிக்கப்பட்டது.



அமெரிக்கன் கோடீச்வரரான மிஸ்டர் ஜே. பி. மார்கன் ஆக்ஸ்போர்ட் ஸர்வகலாசாலை டாக்டர் பட்டம் பெற்ற பிறகு வைஸ் சான்ஸலருடன் வெளியேறின காட்சி.

கனவான். "நான் வெளியூர் போயிருக்கிறேன் என்று சொன்னையா?"

வேலையாள், "சொன்னேன். மேலும் மத்யானம் வரையில் திரும்பி வரமாட்டீர்கள் என்றும் கூறினேன்."

---

வக்கீல், "இந்த ஆள் தான் உன் மோட்டார்வண்டியைத்திருட்டுத் தனமாக ஓட்டிச் சென்றான் என்று நிச்சயமாகத் தெரியுமா?"

மோட்டார் வண்டிக்காரன், "நீங்கள் குறுக்கு விசாரணை செய்யும்வரையில் நிச்சயமாகத் தானிருந்தேன். ஆனால் இப்பொழுது எனக்கு மோட்டார் வண்டி சொந்தமாக விருநதென்பது கூடச்சந்தேகமாயிருக்கிறது."

---

"பக்கத்து வீட்டுத் தம்பதிகள் தெலுங்கு கற்றுக் கொள்கிறார்களே! என்ன விசேஷம்!"

"ஒரு ஆந்திரக் குழந்தையை வளர்ப்பாக எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அது பேச ஆரம்பித்தால் அர்த்தம் செய்து கொள்ள வேண்டுமென்று அதன் பாஷையைக் கற்றுக்கொள்கிறார்கள்.

---

உபாத்தியாயர்:—நிஷ்பிரயோசனமான காரியத்திற்கு ஒரு உதாரணம் கூறு.

மாணாக்கன்:—ஒரு மயிர்க்கூச்சவிடும் கதையைக் கொண்டுபோய் ஒரு ரோமம் அற்ற மனிதனிடம் சொல்லுதல்.

---

எஜமானி:—சாமு, இரண்டு விஷயங்களில் மட்டும் நான் மிகவும் கறாராய் இருப்பேன்; சொன்னபடியே நடக்கவேண்டும். உண்மையையே பேசவேண்டும்.

வேலைக்காரி:—'ஸரி, ஆனால் யாராவது உங்கள் பேட்டி வேண்டிக் கதவைத் தட்டினால் நீங்கள் உள்ளே இருந்து கொண்டு 'வெளியே போயிருப்பதாகச் சொல்' என்று ஏவும் பொழுது, நான் சொன்னபடியே நடககவேண்டுமா? உண்மையைச் சொல்லவேண்டுமா?

---

கப்பற்றலைவன், கப்பல் "டையரியில்,' ஒரு நாள் விபரங்கள் எழுதும்போது, "உபதலைவர் இன்றைக்கு மது மயக்கமாயிருக்கிறார்' என்றெழுதினன.

உபதலைவர் ஆக்ஷேபிக்க, "அதுமெய்யில்லையோ" என்று தலைவன் சொன்னன.

மறுநாள் உபதலைவன், 'கப்பல் டையரியில், "தலைவர் இன்று மது மயக்கம் இல்லாமலிருக்கிறார்" என்று எழுதினன்.

தலைவன் இதைப்பார்த்து "இதுக்கென்னடா அர்த்தம்?" என்று கர்ஜிக்க, 'அது மெய்தானே, இல்லையோ' என்றான் உபதலைவன்.

---

நாயிழந்தவன் :—'போனவாரம் என நாய் கெட்டுப்போச்சு"

நண்பன் :—"பத்திரிகையில் பிரசுரிக்கிறதுதானே"

நாயிழந்தவன் :—பத்திரிகையிலா? என்னததுக்கு? நாய் படிக்குமா?

நமது சிறு கதை.

# காணமற்போன கை.

(ப்ரேமா எழுதியது.)

வடிவேல் பிள்ளை என் மாமன். அவர் சிறு வயதிலேயே இலங்கைக்கு டாக்டராகப்போய் ஏராளமான திரவியம் ஸம்பாதித்துக்கொண்டு சுமார் ஒரு வருஷத்திற்கு முன்னால் ஆவடியில் பங்களா வாங்கிக்கொண்டு வசித்து வந்தார். அவருக்கு ஸந்ததியில்லை. ஏராளமான செல்வம் இருந்தது.

அவர் ஆஸ்திபாஸ்திகளை யாருக்குக்கொடுப்பார் என்று அனேகர் பெருத்த தொகைகள் பந்தயம் போட்டுக்கொண்டிருந்தனர். அவர் நல்ல பலாட்யராக இருந்தபோதிலும் கடந்த காலேந்து வருஷங்களாக அவரும் அவர் மனைவியும் மிக மனமுடைந்து நாளுக்கு நாள் மெலிந்து கொண்டு வருவதாகக்கேள்விப் பட்டேன்.

ஒரு நாள்—புதன்கிழமை—கிறிஸ்மஸ் விடுமுறை ஸமயம். என் பரீக்ஷைகள் முடிந்து இளைப்பாறிக் கொண்டிருந்தேன். என்னை சௌகரியப் பட்டால் ஆவடிக்கு வந்து ஒரு வாரமாவது தன்னுடன கழிக்கும்படி என் மாமனிடமிருந்து கடிதம் வந்திருந்தது. நான் ஆவடிக்குப் புறப்பட ஆயத்தமாய் மறுநாள் காலை வண்டிக்கு வருவதாகத் தந்தி யடித்து விட்டுக் காலையில் கிளம்பினேன்.

என் மாமன் ரயிலுக்கு மோட்டார் அனுப்பியிருந்தார். அவர் வீட்டுக்கு அரை மணியில மோட்டாரில் போய்விட்டேன். அம்மாளிகை ரமணீயமான ஒரு பெரிய தோட்டத்தின் நடுவே வெகு அழகாகக் கட்டப்பட்டு எங்கும் உற்சாகமான காக்ஷிகள் கண்களைக் கவர்ந்தன.

என் மாமியும் மாமனும் என்னைப் புன்னகையோடு வரவேற்று உபசாரங்கள் செய்தார்கள். பகலெல்லாம் குதூகலமாகக் கழிந்தது. இரவு ஆக ஆக அவர்கள் முகத்தில் ஏதோ ஒரு துக்கக்குறி தென்பட்டது. இராப்போஜனம் முடிந்ததும் நானும் என் மாமனும் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தோம்: ஏதோ விஷயத்தில் அவர் தட்டென்று நிறுத்தி,

"நீ சாதாரணமாகப் பயந்தவனா? தைரியசாலியா?" என்றார்.

நான்:—நான் 'பயப்படுவேர்த கிடையாது.'

மாமன்:—நான் உன்னை இப்பொழுது கேட்டுக்கொள்ளப் போகும் விஷயம் எனக்கே ஸரிதானோ அல்லவோ என்று தெரியவில்லை. நீ இவ்விரவு உனக்கு ஏற்பாடாயிருக்கும் அறையிலல்லாமல் வைத்திய அறையில சயனித்துக் கொள்ள வேண்டும்.

நான்:—எந்த படுக்கச்சொல்லுகிறீரோ அங்கு நித்திரை செய்யத் தயாராயிருக்கிறேன்.

வைத்திய அறை என்பது வீட்டின் தென்புற ஓரமாயுள்ள ஒரு பெரிய அறை. அதில் அநேக அலமாரிகளும் பீரோக்களும் வரிசையாகச் சுவரோரம் வைக்கப்பட்டிருந்தன. அப்பீரோக்களில் அநேக விதமான மருந்துகளும் புஸ்தகங்களும், ஆயுதங்களும் இன்னும் அனேக



பெல்லாரி சுகாதார வாரத்தின் போது ராமலக்ஷ்மண வேஷம் தரித்து முதல் பரிசு பெற்ற ஜில்லா விவசாய ஆபீஸ் ஸ்ரீமான் கிருஷ்ணராவ் குழந்தைகள் I.N.A.

விதமான வைத்திய சாமக்கிரியைகளும் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன ஒரு அலமாரியில கண்ணாடி ஜாடிகளில அனேகம சாதுகளும், கால் விரல்களும், தினிப்பை, கால் விரல் முதலிய மனித அவயவங்கள் சாராயத்தில் பதனப்படுத்தப்பட்டு வரிசையாக இருந்தன. அவைகளெல்லாம் என் மாமன் ரண சிகிச்சை செய்த அனேக வியாதியஸ்தர்களின் அவயவங்களெனப் பிற்பாடு தெரியவந்தது. அறையின் நடுவே இரண்டு மேஜைகள் போடப்பட்டு, அவைகளில பீங்கான் தட்டுகளும் ஜாடிகளும் இருந்தன. வடிவேல் பிள்ளை வைத்திய வேலையை விட்டு இரண்டு வருஷங்களாயினவெனினும் இச்சாமான்களெல்லாம் ஞாபகார்த்தம் வைத்திருந்தன போலும்.

என் படுக்கை வடவண்டை ஓரம் போடப் பட்டிருந்தது. ஜன்னல்களின்வழியாகச் சந்திர கிரணங்கள் படுக்கை எதிரே சதுரமாக வெளிச்சம் உண்டாக்கின. மிகக் குளிராக இருந்தகாலும் கொஞ்ச நாளாக நல்ல தூக்கம் இல்லாதிருந்ததாலும் நான் அயர்ந்து தூங்கிவிட்டேன்.

சுமார் இரண்டு மணி இருக்கும். அறையில் ஏதோ அரவம் கேட்டது போலிருந்தது. நான் விழித்துக் கொண்டு பார்க்குங்கால் தலையிலிருந்து கால்பரியந்தம் சன்னியாசி மாதிரி நீண்ட உடையும் தலையில்பெரிய தலைப்பாகையும் உள்ள ஒரு உருவம் கண்ணாடி ஜாடியில் வைக்கப்பட்டிருந்த அவயவங்களை ஒவ்வொன்றாக உற்றுநோக்கி, ஒவ்வொரு ஜாடியையும்கையினால்தூக்கிப்பார்த்துவிட்டு, மறுபடியும் பழைய இடத்திலேயே வைத்து, கடைசியில் கட்டில் பக்கமாய்த் திரும்பிற்று. அதன முகம கன்னங்கரேலென்று அழகிய தாடியுடனும், தீக்ஷண்யமான கண்களுடனும் விளங்கிற்று. அந்தஉருவம் என்படுக்கையண்டை வந்தவுடன் என்னை எரித்து விடுவது போல் நோக்கித தன்கைகளை மேலே தூக்கி இடக்கையால் குத்துசண்டை செய்பவர்போல் முஷ்டியை மடக்கி ஆட்டிற்று. கைகளென்றால் இடக்கைமாத்திரமே மேலே தூக்கியிருந்தது. வலக்கைக்குபதில ஒரு சிறிய முண்டம் மாத்திரம் இருந்தது. மிருந்த சட்டை கீழே தொங்கிற்று. அந்தஉருவம் என் தலைமாட்டண்டை ஒருவினாடி நின்று மறைந்து விட்டது.

நான் படுக்கையை விட்டெழுந்து சுற்றுமுற்றும் நன்றாகத் தேடிப் பார்த்தேன். ஆளைக் காணோம். சந்திர கிரணங்கள் மட்டும் என் தலையண்டையிலிருந்து காலிடம வந்திருந்தது. புரண்டு புரண்டு படுத்தும் எனக்குத் தூக்கம் வரவில்லை. கிழக்கு வெளுத்தவுடன் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு கூடத்திற்கு வந்தேன். வடிவேல் பிள்ளை எனக்கு முன்னால் அங்கே உட்கார்ந்திருந்தார்.

அவர் "இரவு என்ன கண்டாய்?"

நான் "ஒற்றைக்கையு.........

மாமன் "ஒற்றைக் கையனா? உனக்கும் தென்பட்டதா ?"

நான்:— ஆம்.

மாமன்:— நான் அதை எதிர் பார்த்தேன். மிகப் பயந்து கொண்டாயோ?

நான்:— இல்லை. அதுஎன்ன? அதைப்பற்றி உங்களுக்குத் தெரிந்தால் எனக்குச் செல்ல வேண்டும்.

மாமன்:— சுமார் 15 வருஷங்களுக்குமுன் நான் கொளம்புவிலிருந்து யாழ்ப்பாணம் போக நேர்ந்தது. அங்கே ஒருமலாய் நாட்டான் தன் கைக்கு ரண சிகிச்சைசெய்து கொள்ளவிரும்பினான். நான் கையைப் பரிசோதித்த பொழுது கையையே எடுத்து விட்டாலொழிய அவன் சுகமடைய மாட்டானென்று சொன்னேன். அவன் அதற்கு இணங்கவில்லை. சில நாட் கழித்து ரணம் மிகக் கெடுதலாகப் போய் விட்டபடியால் அவன் கையை எடுத்துவிட்டேன். மலாய்நாட்டான் தனக்கு அக்கை வேண்டுமென்றான்

ஒருவன் இறக்கும்பொழுது தன் முழு தேகமும் இல்லாவிட்டால்ஸ்வர்க்கத்திற்கு அருகனல்லவென்பது அந்த ஜாதியாரின் எண்ணம். இதனாலேயே எகிப்தியர் பிணங்களை அதி ஜாக்கிரதையாக பிரமிட் முதலியவற்றிற் பாதுகாக்கின்றனர். அந்த நம்பிக்கையுள்ள அந்த ஆள் தன் கரத்தைத்தானே பாதுகாத்து வைத்துக்கொண்டு இறக்கும் பொழுது முழு உடலையும் பூரணமாக வைத்துக் கொள்ள ஏற்பாடு செய்வதாகச் சொன்னான் நீ எப்படிப் பாது காப்பாய்?' என்று நான் கேட்க அவன் உப்பில் வைத்துக்கொள்வதாகச் சொன்னான். நான் அதற்கு, உப்பைவிட நன்றாகப் பதனப் படுத்தும் பொருள் இருப்பதாயும், நானே அவனுக்குஅக்கரத்தைப்பாதுகாத்துக் கொடுப்பதாயும் சொல்லி அக்கரத்தைக் கண்ணாடி ஜாடியில் சாராயத்திற் போட்டுவைத்தேன். அவன் இரண்டு வருஷங்கள்கழித்துக் கையை வந்து பார்த்துவிட்டு அதை மிக்க ஜாக்கிரதையாய்ப் பாதுகாக்கும்படி வேண்டிக்கொண்டு சென்றான். நான் சிரித்துக்கொண்டே ஆகட்டுமென்றேன்."

(10-ம் பக்கம் பார்க்க.)

## விவசாயப் பகுதி.

### விவசாயத் துணுக்குகள்

(ஸ்ரீமான் பி. எஸ். பார்த்தசாரதி ஐயங்கார், பி. ஏ., பி. எல். எழுதியது.)

#### நாம் காய்கறிகளை அவசியம் உண்ணவேண்டுமோ?

காய்கறிகள் நமக்கு அவசியமான உணவுப்பதார்த்தங்கள். இவைகளுள் கிழங்குகள் தேகத்தை இரட்சிக்கும் உணவுகளாம். அரிசி, கோதுமை முதலிய தானியங்களில் குறைவாயிருக்கும் உப்புபோன்ற தாதுக்களாகிய 'கால்சியம்,' 'சோடியம்,' 'க்ளோரீன்' ஆகிய மூன்றும் கீரைகளில் உண்டு. (2) இரத்தத்தை 'ஆஸிட்' அல்லது ஓவிதப் புளிப்பு ஆகாமல் தகுந்த ஆரோக்கிய ஸ்திதியில் வைக்கும். முக்கியமாய் மாமிச உணவை உண்டால் இரத்தம் 'ஆஸிட்' ஆகும். அந்த 'ஆஸிட்'டைக் கீரைகள் எடுத்துவிடும். (3) தானியங்கள், பருப்பு முதலிய தாவர உணவுகளில் உள்ள 'ஆல்பூமன்' என்னும் நைட்ரோஜன் கலந்த பதார்த்தத்தைத் தேகபோஷணைக்குத் தக்கவைகளாக மாற்றும். சிறந்த வேறு சில ஆல்பூமன்கள் கீரைகளில் உண்டு. (4) வைடாமின் A, B, C என்னும் மூன்று ஜீவசக்திகளும் கீரைகளில் அதிகம். (5) கீரைகளிலுள்ள 'செலுலோஸ்' என்னும் நார் பதார்த்தத்தால் ஜீரணக் கருவிகளாகிய குடல் முதலியவைகள் தங்கள் வேலைகளை நன்றாய்ச் செய்து, மற்ற உணவுகளையும் ஜீரணமாக்கும். மலச்சிக்கலையும் போக்கும். கிழங்குகளல்லாத மற்ற காய்கறிகளும் மேற்சொன்ன குணங்களைச் செய்யும்.

#### எவ்வளவு காய்கறிகளை உண்ணவேண்டும்?

சுமார் 20 அவுன்சு காய்கறிகளை ஒவ்வொருவரும் தினம் உண்ணவேண்டும். இதில், முள்ளங்கி, வெள்ளிக்கிழங்கு, கருணை சேம்பு முதலிய கிழங்குகள் சுமார் 8 அவுன்சும், (2) 'காபேஜ்' என்னும் கோசுமுட்டை, 'லெட்யூஸ்' கீரை, வசலை, காசினி, அரைக்கீரை முதலிய கீரைகள் 8 அவுன்சும், (3) உலர்த்திய மாங்காய் வற்றல் 4 அவுன்சையும் கலந்து உண்ண வேண்டுமென டாக்டர் மக்காரிஸன் என்னும் உணவுப்பதார்த்த நிபுணர் கூறுகின்றனர். மேல் சொன்ன இருபது அவுன்சு, என்றால் சுமார் அரை வீசை கீரை, காய்கறிகள் 300 'காலோரி' உஷ்ணத்தை உண்டாக்குமாம்.

#### சிறுவர்கள் பெரியவர்களைக் காட்டிலும் அதிகமாய் உண்கின்றனரா?

எத்தனை தாய்மார்கள் "நம் கிட்டு அவன் தந்தையை விட அதிகமாய் வேளை வேளையும் உண்கின்றானே! எங்கே போகிறது இந்த உணவு?" என்று அடிக்கடி பல வீடுகளில் கேட்கிறார்கள். இது ஓர் பிசகான அபிப்பிராயம். ஆனால் வைத்திய நிபுணர்கள் கூட வெகு காலமாய் பதின்மூன்று வயதுள்ள வாலிபனுக்கு இருபத்தைந்து வயதுள்ள ஒரு மனிதனுக்கு வேண்டிய ஆகாரத்தில் ஐந்தில் நான்கு ($\frac{4}{5}$) பங்கு உணவு தான் வேண்டுமெனச்சிறந்த புத்தகங்களில் கூடக் கூறிவந்தனர்.

பதின்மூன்று வயதுள்ள பெண் அதே வயதுள்ள ஆண் பிள்ளையைக் காட்டிலும் குறைவாய் உண்கிறாள் என்றும் சொல்லிவந்தனர். பதின்மூன்று வயதுள்ள பெண் ஒரு புருஷன் உண்பதில் பத்தில் ஏழு ($\frac{7}{10}$) பங்கு உண்டால் போதும் என்றனர். எட்டுவயதுள்ள சிறுவர்கள், பெரியவர்கள் உண்ணும் உணவில் அரைவாசி (பாகம்) உண்டால் போதும் என்றனர்.



திருத்தணியில் ஜமீன் விவசாயிகள் மகாநாட்டை சென்னை முதல் மந்திரி ஸ்ரீமான் பி. முனுசாமி நாயுடு திறந்து வைத்தபோது எடுத்தபடம். P.P.B



ஸெண்டரல் ஸ்டேஷன் ரயில்வே உத்யோகஸ்தர்களால் சென்னை வைத்திய கலாசாலையில் ஏற்பாடு செய்யப்பட்ட 'கிரிஸ்மஸ் மரம்' D.A.Rao.

1920-ம் வருஷத்தில் அமெரிக்க ஐக்கிய மாகாணங்களில் இவ்விஷயத்தைப் பரிசோதிக்க ஆரம்பித்தனர். பதினறுவயது முதல் இருபத்தைந்து வயது வரையில் சரியாய் வேலை செய்யும் வாலிபர்களுக்கு இருபத்தைந்து வயதுக்கு அதிகப்பட்ட மனிதனைக்காட்டிலும் அதிக உணவு அவசியமெனக் கண்டு பிடித்திருக்கின்றனர். மற்றும், பதின்மூன்றும் (வயது) பிராயம் பூர்த்தியாகும் வரையில் பிள்ளைகளுக்கும், பெண்களுக்கும் ஒரே அளவு ஆகாரம் வேண்டுமென்றும் கண்டு பிடித்திருக்கின்றனர். இந்த விஷயம் இந்தியாவில் நாட்டுப்புறங்களிலுள்ள விவசாயிகளேயல்லாமல், பட்டண வாசகங்களிலுள்ள பெற்றோர்களும், பள்ளிக்கூடங்களைச் சேர்ந்த போஜனசாலை அதிகாரிகளும் கவனிக்கத் தகுந்தது.

'சுதேசமித்திரன்' பத்திரிகையில் வள்ளிக்கிழங்கைக் குறித்து ஒரு வியாசம் எழுதியிருந்தேன். இப்பொழுது கிடைத்திருக்கும் அமெரிக்க ஐக்கிய மாகாண 1930-ம் வருஷத்திய விவசாய ரிப்போர்ட்டில் கூறியிருக்கும் பின்கண்ட விஷயங்களும் கவனிக்கத்தக்கவை:—

ஒரு பவுண்டு எடையுள்ள வள்ளிக்கிழங்கு 570 'காலோரி' உஷ்ணத்தை உடம்பில் உண்டாக்கும். அனேக காய்கறிகளுக்கு இதில் பாதியளவு உஷ்ணத்தை உண்டாக்கும் சக்தி கூட இல்லை. ஒரு பவுண்டு அரிசியில் சுமார் 1,800 காலோரி உஷ்ணத்தையும், சோளம் சுமார் 1,600 'காலோரி' உஷ்ணத்தையும், துவரம்பருப்பு சுமார் 1,600 'காலோரி' உஷ்ணத்தையும் உண்டாக்கும் என்பதை, ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக இங்கு குறிக்கப்பட்டிருக்கிறது.

வள்ளிக்கிழங்கில் 100-ல் 17 பாகம் எடை 'ஸ்டார்ச்' அல்லது மாவும், நான்கு முதல் ஐந்து பாகம் சர்க்கரையும் கலந்திருக்கும். 'ஸ்டார்ச்' என்னும் மாவைச் சர்க்கரையாக மாற்றும் 'டயாஸ்டாஸ்' என்னும் ஒரு பதார்த்தம் இதில் அதிகமாய் உண்டு. இது நம் எச்சிலிலும் உண்டு.

வள்ளிக்கிழங்கை 130° முதல் 150° F. உஷ்ணமுள்ள நீரில் வேகவைத்தால் வெகு சீக்கிரத்தில் அதிலுள்ள 'ஸ்டார்ச்' என்னும் மாவு எல்லாம் 'மால்டோஸ்' என்னும் சர்க்கரையாக மாறிவிடும். ஆகையால் இதை ஓர் சர்க்கரை பதார்த்த உணவென்றே சொல்லலாம்.

இதில் முட்டைச் சத்துள்ள 'ஆல்பூமன்' மற்ற அனேக காய்கறிகளிலிருப்பதைக் காட்டிலும் அதிகம். சாதாரண வள்ளிக்கிழங்குகளில் நூற்றில் இரண்டு பங்கு ஆல்பூமனும், உயர்ந்த ஜாதிகளில் $3\frac{1}{2}$ பங்கு ஆல்பூமனும் அடங்கியிருக்கும். மற்றும், கோதுமை முதலிய தானியங்களில் இருப்பதைவிட அது குறைவாயிருந்தபோதிலும், இதிலுள்ள 'ஆல்பூமன்' மற்ற கோதுமை முதலியவைகளிலுள்ள அனேக தாவரவஸ்து ஆல்பூமன்களைக் காட்டிலும் மனிதரைப்போஷிப்பதற்கும், நன்றாய் வளரச் செய்வதற்கும், மிகவும் சிறந்ததாய் அரிசி, கோதுமை முதலியவைகளில் இல்லாத சில நல்ல 'அமினோ ஆஸிட்' என்னும் சத்

துகள் வள்ளிக்கிழங்கில் இருப்பதால், சரியான பலம் வருவதற்கும், தேக வளர்த்திக்கும், அரிசி, கேழ்வாகு, கோதுமை முதலிய தானியங்களுடனும், துவரம்பருப்பு முதலிய பருப்புகளுடனும் வள்ளிக்கிழங்கைச் சேர்த்து நாம் அடிக்கடி உண்ண வேண்டுமென அமெரிக்க வைத்திய நிபுணர்கள் மேல் சொன்ன ரிப்போர்ட்டில் வற்புறுத்திக் கூறுகின்றனர்.

வள்ளிக்கிழங்கில் வைடாமின் A, B, C, மூன்றும் இருக்கின்றன. உடைத்தால் உள்ளே கொஞ்சம் மஞ்சளாயிருக்கும் கிழங்குகளில் வெள்ளை ஜாதிக் கிழஙகுகளைக் காட்டிலும் அதிக வைடாமின் உண்டு. வைடாமின் C சர்மவியாதிகளாகிய சிரங்கு, ஸகர்வி, தேமல், மேகப் படை முதலிய வியாதிகளுக்கு மிகவும் நல்லமருந்து. எலுமிச்சம் பழம், கிச்சிலிப்பழம் முதலியவைகளில் வைடாமின C அதிகமாய உண்டு. வள்ளிக்கழங்கின் இரசம் கிச்சிலிப்பழ இரசத்தின் சகதியில் மூன்றில் ஒரு பங்குப, அனுசிப் பழ இரச சக்தியில் அரைவாசி வைடாமின் C சக்தியும் உள்ளது.

வள்ளிக்கிழங்கின் மாவு.

இதைச் செய்வது மிகவும் சுலபம். அமெரிக்காவில் இப்போது இதை ஏராளமாய்ச் செய்கின்றனராம். ஒரு முறையில் வள்ளிக்கிழங்கைக் கழுவி மேல் தோலைச் சீவி விட வேண்டும். பிறகு கிழங்கைச் சிறு துண்டுகளாக நறுக்கி, வெய்யிலில் நன்ருய் உலர்த்த வேண்டும். உலர்ந்த துண்டுகளைக் கல் உரல் முதலியவைகளில் இரும்பு படாமல நன்ருய் இடித்து சன்னசல்லடைகளில் சல்லித்து எடுததால நல்ல வழுவழுப்பான மாவுகிடைககும்.

மற்ெருரு முறை:— இதில் பச்சைக கிழஙகிலதோலைச்சீவிப் பெரும் துண்டுகளாக நறுக்கி உலர்த்தாமலே உடனே உரவில் போட்டு இடித்தாகிலும், ஆடு உரல்களில் ருப்பு குண்டால அரைத்தாகிலும நன்ருய் வெண்ணெய் போல செய்ப வேண்டும். இநத மாவை, வேண்டுமானுல்கொஞ்சம் தணணீர் கலந்து ஓர் வஸ்திரம அல்லதுகோணிப் பட்டையை மற்ெருரு வாய கண்ட பாத்திரததின் மேல் போட்டு மூடி வடிகட்ட வேண்டும். மெல்லிய மாவெல்லாம் நீருடன் கலந்து அடிப்பாததிரத்தில் இறங்கும். சுமார் இரண்டொரு மணிக்குள்ளாக மாவெல்லாம கீழேபடியும். மேலே தெளிந்த நீரை இறுத்து விட்டு மாவை எடுத்து வெய்யிலில் உலர்த்துவார்கள்.

வள்ளிக்கிழங்கின் மாவு நல்ல மணமுள்ளதாயிருக்கும். இரண்டொரு வருஷம் வரையில் கூடக் கெடுவதில்லை.

வள்ளிக்கிழங்கு ரோட்டி.

வெள்ளிக்கிழங்த மாவில் கோதுமை ரொட்டி போன்ற பருமனுகும்ரொட்டியைச்செய்ப முடியாது. ஆனுல் 100 பங்கு கோதுமை மாவுடன் $1\frac{1}{2}$ பங்கு வள்ளிக்கிழங்கு மாவைக் கலநதால நல்ல ரொட்டிசெய்யலாம் சாதாரண கோதுமை மாவில் செய்யும் ரொட்டியைக் காட்டிலும் உருசியும் அதிகம். எடையும் அதிகம். தேகத்தைப போஷிககும் குணமும் அதிகம்.

வள்ளிக்கிழங்கு ஷர்பத்து

வள்ளிக்கிழங்கை துருவிப் பிழிந்தால இரசம்வரும அநத இரசத்துடன் வேண்டிய அளவு சர்க்கரையைக்கலந்து ஷர்பத்து செய்யலாம். கிழங்கை மாவு போல் அரைத்து இரண்டொரு மணிநேரம் 150°F உஷ்ணததில வேக வைததால், அதில் உள்ள மாவெல்லாம் ,மால்டோஸ் அல்லது மால்ட் ஷுகர் என்னும்சர்க்கரையாக மாறும. இதனுடன் கொஞ்சம் சாக்கரையைக் கலந்து இன்னும கொஞ்ச நேரம் சிறு தீயில காய்ச்சினுல் நல்ல ஷர்பபத்து ஆகும. மருந்து ஷாப்புகளில பார்லி அரிசியிலிருநது எடுத்த ஆதே மாதிரியான மால்ட் சர்க்கரையை, கெப்ளர்ஸ் மாலட் எக்ஸ்ட்ராக்ட்' என்றும, காட்லிவர் ஆயிலுடன் கலந்தும் அதிக விலைக்கு விற்கிறுர்கள். 'மால்ட் சர்ககரை சிறு குழந்தைகளை நன்ருய் வளரச் செயயும் எல்லோருக்கும் நல்ல ஜீரணத்தை உணடாக்கும் ஓர் சிறந்த ஆரோக்கியமான உணவுப் பதார்த்தம்.



## காணுமற்போன கை.

(8-ம்பக்கத் தொடர்ச்சி.)

"நாங்கள் கொளம்பிலிருந்து இந்தியாவுக்குத் திரும்ப சுமார் மூன்று வருடங்களிருககும். நான் குடியிருந்த வீடு தீப்பற்றிக்கொண்டு, அநேகச் சாமான்கள் நஷ்டமாயின. அவைகளில் மலாய் நாட்டான் கரம் ஆஸ்பத்திரியிலிருந்த அநேகம் சாமான்களோடு எரிந்துவிட்டது. அவ்வறையினின்றும் சில சாமான்களே காப்பாற்றப்பட்டன.

2 வருஷங்கள் கழித்து ஒரு நாள் நான் தூங்கிக்கொணடிருக்கும்போது யாரோ தட்டி எழுப்பினமாதிரி இருந்தது. பார்க்கையில் நான் கையை சிகிச்சை செய்த அம்மலாய் நாட்டான் கண்ணுடி ஜாடியிலிருந்த ஒவ்வொரு அவயவத்தையும் பரீக்ஷை செய்துவிட்டு எனனிடம் வந்து தன்னுடைய வெட்டுண்ட கரம் எங்கே என்பதைப்போல் மற்ெருரு கையினுல் சைகை செய்தான். அவன கையைக் கேட்கிறுன் என்று எனககு நனருக விளங்கிற்று. நான் எனன செய்வேன் ? கையிலலை. நான் சும்மாயிருப்பதைக்கண்டு அவன் கோபததோடு போய் விட்டான். அந்தச்சமயம் தான் அவன் இறந்தானபோலும், அந்த உருவம நான் கொளம்புவிலிருந்த மீதி நாளும், கப்பலிலும, வண்டியிலும், இந்த வீட்டிலும், ஒரு நாளாவது என் முன் தோற்றுமலில்லை. நான் மாத்திரமல்லாமல் என் மனைவியும் பயமுடைந்து எங்கள் உடம்பு பாதயுடம்பாய்விட்டது. மனிதரால் உணடாகாத இநதத தொந்திரவுக்குஎந்தப் போலீசிடம முறையிடுவது ? இச்சமாசாரததை அறிவிக்கவே நான் உன்னை இங்கு வரவழைத்தேன" என்று முடித்தார்.

நான் இக்கதை முடிந்தவுடன உடுத்துக்கொண்டு பட்டணம் போகிறேன் என்று கிளம்பி விட்டேன். நான் பயந்து கொண்டேன் என நினைத்து அவர்கள ஒரு ஆட்சேபனையும் சொல்லவிலலை. நான் அன்று மத்தியானமே சென்னை ஜெனரல்ஆஸபததிரிக்குவந்து பிணப் பரிசோதகசாலையில் என் சிநேகர் டாக்டர் மணியைக் கண்டு பேசி மலாய் நாட்டார் சவம் ஏதேனும் பரிசோதனைக்கு வந்தால் எனக்குத் தெரியப் படுத்தும்படிக கேட்டுக் கொண்டேன். அதிருஷ்ட வசத்தால் மலாய் நாட்டு பூலுமி ஒருவன் சவம் பரிசோதனைககு வந்திருந்தது. நான் உடனே ஒரு கரததை பகிர்ந்தெடுததுக்கொண்டு, அன்றேதிரும்பி ஆவடிக்குப் பிரயாணமானேன. அன்று என் மாமனிடம் சமாசாரம ஒன்றும் சொலலாமல் கையை மாத்திரம் கண்ணுடி ஜாடியில்போட்டுமற்ற அவயவங்களோடு வைதது விட்டு மறுபடியும் வைத்திய அறையில் சயனித்துக்கொண்டேன்.

எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. எப்படி பிடிக்கும்? மணி 11, 12, 1-ம் ஆயிற்று. இரண்டு மணி சுமாருக்கு முதல் நாள் தெரிந்த உருவம மறுபடி ஜாடிகளைப் பரிசோதிக்க ஆரம்பித்து, நான்புதிதாகக்கொண்டு வந்த ஜாடியைக்கையில் எடுத்துக் கொண்டு சற்றுநேரம் உற்று நோக்கி ஜாடியைத்தடாலென்று கீழே மோதியுடைத்து விட்டு என்னையும் மிகக்கோபமாக பார்த்துச் சென்றுவிட்டது. அப்போது உண்டான சப்தத்தால் என் மாமன் எனக்கேதோ ஆபத்துண்டானதாக எண்ணி ஓடோடியும் வந்து விஷயத்தை விசாரித்தார். நான் நடந்ததைச் சொன்னதன் பேரில் அவர்மிக வருத்தங் கொண்டு, என்னை இனி அவ்வறையில் சயனிக்கலாகாதென்று கட்டளையிட்டு வேறு அறையில் படுக்க ஏற்பாடு செய்தார்.

நான் கீழே சிதறியிருந்த கரத்தை நோக்கியபொழுது என்னுடைய மடத்தனம் எனக்கு நன்ருக விளங்கிற்று. அம்மலாய் நாட்டானுக்கு வலக்கையிலலை. வலக்கை வேண்டியிருந்தது. நான் கொண்டுவந்ததோ இடக்கை. இவ்விஷயம் புலப்பட்டவுடன் எனக்குச் சொல்லொணு வியப்பும் துக்கமும் உண்டாயிற்று. திரும்பவும சென்னைக்குப் பிரயாணமானேன். மிகுந்த ஆவலோடு மணியைப் போய்ப் பார்த்து வலககையை எடுத்துக் கொண்டு திரும்பிவந்து எப்பொழுது அஸ்தமிக்கும் எனறு காத்துக் கொண்டிருந்தேன்.

வடிவேல் பிள்ளை நான் எவ்வளவு சொல்லியும் வைத்திய அறையில் நான் படுக்கக் கூடாதென்று உத்திரவிட்டுவிட்டார். நான் வலக்கையை முன் போல் ஜாடியில் போட்டு மற்றவைகளோடு வைத்துவிட்டு, எனக்கு ஏற்படுத்தியிருந்த அறைக்குச்சென்று விட்டேன். சுமார் 3 மணிக்கு என் மாமனும் மாமியும் ஓடோடியும் வந்து என்னை எழுப்பி ஆலிங்கனம்செய்துகொண்டு பலவாருகப் புகழ்ந்தனர். நான் விஷயம் என்னவென்று விசாரித்ததற்கு என்மாமன், அம்மலாய் நாட்டான அவ்விரவு தன்னைத் தூக்கத்திருந்து தட்டி எழுப்பினதும, முன்போல் கோபமாக இல்லாமல, சந்தோஷமாகப்புன்னகை புரிந்து தன் ஜாதி வழக்கம்போல் முழந்தாளிட்டு வணக்கம் செய்து தன் இடக்கை மட்டுமல்லாமல் வலககையையும் மேலே தூக்கிக்கும்பிட்டதாகவும் வலக்கையைக் கண்டதும அவர் ஆச்சரியமடைந்து வைத்திய அறையில் போய்ப்பார்த்ததாகவும், அந்த ஜாடி மட்டும் கையில்லாமல் கீழே இருந்ததென்றும் இனிமேல் அவ்வுருவம தன்னிடம் வராதென்றும் சொல்லிச் சந்தோஷக் கூத்தாடினுர்.



# சங்கீதமும் நாடகமும்



## நாடகமேடை நினைவுகள்.

[காபிரைட்.]

[ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார், பி.எ.பி.எல். எழுதியது.]

நான் பார்த்ததற்குள் நாடகக் கம்பெனிகளில் வேலுநாயர் என்பவரே இம்மனோஹரன் வேடத்தை என் மனதிற்குத் திருப்தியாகப் பூண்டிருக்கிறார். ஆயினும் இவர் இவ்வேஷம் தரிப்பதில் ஒரு முக்கியமான குறையை மாத்திரம், தமிழ் நாடகமேடையின் அபிவிர்த்தியின் பொருட்டுக் கூறவேண்டியவனாயிருக்கிறேன். இவர் உடுக்கும் உடைமாத்திரம் இந்தப் பாத்திரத்திற்கு ஏற்றதன்று. ஸ்காட்லாண்டு தேசத்திலிருப்பவர்கள் உடுக்கும் ஹைலாண்டு ஸ்கர்ட் (Highlanders skirt) மாதிரியாக முழுக்காலளவு, ஒரு ஆடையைப் போட்டிருக்கிறார். இது என்ன காரணம்பற்றியோ அறிகிலேன். இதை இந்த வேஷத்தில் அணிவது உசிதமல்லவென்றே எனக்குத் தோன்றுகிறது. இம்மாதிரியான உடைகள் நமது பூர்வீகர்கள் உடுத்ததாக எங்கும் சொல்லப்படவில்லை. காலுக்கு ஜல்லடம் போன்ற உடையே உடுத்தல் நியாயமாகும். ஜல்லடம் மாத்திரம் அக்காலத்தில் இருந்ததோ என்று இதைப் படிப்பவர்கள் சந்தேகப் படவேண்டாம். பூர்வ காலத்தில் இடுப்பு முதல் கால் வரைக்கும் அணியும் உடைகளிருந்திருக்கின்றன. சங்க காலத்தில் அதற்கு ஒரு பெயர் உண்டு. சில பாட்டுகள் மாத்திரம் அதிகமாய்ச் சேர்த்தபோதிலும், வசனத்தில் ஒன்றும் மாற்றாமலும், அதிகமாய்ச் சேர்க்காமலும், என் அபிப்பிராயப்படி, இப்பாத்திரத்தை சற்றேறக்குறைய நன்றாய் நடிப்பவர் இவரே என்று சொல்லவேண்டும்.

தற்காலத்திய தென் இந்தியா தமிழ் நாடக மேடையில் ஸ்திரீகள் ஆண் வேடம் தரிப்பது மிகவும் கொஞ்சமேயாம். அதில் மனோஹரன வேடம் ஒன்றாகும். சிலநாடகக்கம்பெனிகளில் ஸ்திரீகள் இம்மனோஹரன் வேடம் பூண்டு நடித்ததை நான்பார்த்திருக்கிறேன். அவர்களிலெல்லாம் காலஞ் சென்ற ராஜாம்பாள் என்னும் மாதே மிகவும் நன்றாக நடித்ததாக என் அபிப்பிராயம். ஆடவர்கள் ஸ்திரீ வேஷம் பூணுவதைவிட, ஸ்திரீகள் ஆண்மக்கள் வேஷம் பூணுவது மிகவும் கடினம் என்பது என் எண்ணம். அப்படியிருந்தும் இந்த ராஜாம்பாள் (இம்மாது சில வருஷங்களுக்குமுன் காலகதியடைந்து விட்டனள். இப்பொழுது இப்பெயரையுடைய இன்னொரு ஸ்திரீ இவ்வேஷம் தரித்து வருகின்றனள். நான் குறிப்பது இம்மாதன்று.) மனோஹரனாக நடித்தது எனக்குத் திருப்தியைத் தந்தது. என்ன இருந்த போதிலும் பெண்பாலாதலால் "சங்கிலி அறுக்கும் காட்சி"யில்மாத்திரம் அவ்வளவு திருப்திகரமாயில்லை.

பாய்ஸ் கம்பெனிகளில் (Boys Company) அநேக கம்பெனிகள் இந்நாடகத்தை நடத்திவருகின்றனர். ஏறக்குறைய எல்லா பாய்ஸ் கம்பெனிகளும், என் அனுமதியைப் பெற்று, நடத்திவருகிறார்கள் என்றே நான் கூறவேண்டும். அவைகளில் இம்மனோஹரன் வேஷம் பூண்டவர்களுக்குள் ஜகன்னாத ஐயர் கம்பெனியில், காலஞ்சென்ற மதனகோபால் என்னும் சிறுவன்தான் மிகவும் நன்றாக நடித்ததாக என் அபிப்பிராயம். இச்சிறுவன் சிறுவயதிலேயே சில வருஷங்களுக்கு முன்பாக இறந்ததாகக் கேள்விப்பட்டு நான் துக்கப்பட்டேன்.

ஆமெடூர் சபையில் (Amateur Dramatists) அநேகம்பெயர் இவ்வேஷம் தரித்திருக்கின்றனர்; அவர்களிலெல்லாம், கூடிய வரையில் என் மனதிற்குத் திருப்திகரமாயிருந்தது. சில வருஷங்களுக்கு முன் எக்செல்சியர் கிளப் (Excelsior Club) பில், சுப்பிரமணிய முதலியார் என்பவர் நடித்ததேயாம்.

ஆயினும் இவர்களில் பெரும்பாலர், இவ்வேடம் பூண்டு நடிப்பதில ஒரு முக்கியமான தவறிழைக்கிறார்கள் என்றே நான் கூறவேண்டும். இங்ஙனம் கூறுவது அவர்கள்மீது குறை கூறுவதற்கன்று. இக்குற்றத்தைத் திருத்தி இன்னும் செம்மையாக அவர்கள் நடத்த வேண்டுமெனக் கோரியே இதை எழுதுகிறேன். இந்நாடகத்தில் இரண்டாவது அங்கம் முதற் காட்சியில், மனோஹரன்தான் தன் தந்தைக்காகப் பகைவரிடமிருந்து ஜெயித்துக்கொணர்ந்த சிம்மாசனத்தின்மீது, தந்தையும் அவரது வைப்பாட்டியாகிய வசந்தசேனையும் உட்கார்ந்திருப்பதைக் கண்டு, கோபாவேசங்கொண்டு, வாளை உருவியும் சத்திய சீலர் பத்மாவதி தேவிக்கு மனோஹரன் அளித்த வாக்குறுதியை ஞாபகப்படுத்த, தன் வாக்கால் கட்டுப்பட்டவனாய், கண்களில் நீர் ததும்ப சபையை விட்டு விலகுகிறான்; இச்சந்தர்ப்பத்தில் நான் நடிக்கும் பொழுதெல்லாம், ஒரு முறை சரேலென்று திரும்பிக் கோபத்துடன் வசந்தசேனையைப் பார்த்துவிட்டுப் பெருமூச்செறிந்து, உடனே ரங்கத்தினின்றும் வெளியிற் போவது என் வழக்கம். இது நாடகம் பார்க்க வந்திருப்பவர்களுக்கெல்லாம் திருப்தியைக் கொடுக்கிறதென நான் சொல்லவேண்டும். இப்படிச் செய்வது நன்றாயிருக்கிறதெனச் சபையோர்மெச்சுகிறார்களே யென்று, இதை ஒரு முறைக்கு இரண்டு மூன்று முறை திருப்பித் திருப்பிச் செய்கிறார்கள் மற்றவர்கள். இது தவறென்பது என் கொள்கை. ஒன்றை ஒரு முறை செய்தால் நன்றாயிருந்தால், அதைப் பன்முறை செய்தால் அதிக நன்றாயிருக்கும் என்று எண்ணுவது நாடக சபைக்கு ஒப்பானதன்று. இச்சந்தர்ப்பத்தில் எனக்கு இரண்டு தமிழ்ப்பழமொழிகள் ஞாபகத்திற்கு வருகின்றன. ஒன்று "அளவுக்குமேல் உண்டால்அமுதமும்விஷமாகும்" என்பது; மற்றொன்று, "கரும்பு தித்திக்குமென்று வருடன் உண்ணலாமா?" என்பதாகும். நான் மேற்சொன்னதைக் கருதி, இனியாவது இம்மனோஹரன் வேடம் பூணுபவர்கள், மேற்சொன்ன சந்தர்ப்பத்தில், ஒருமுறையே அவ்வாறு திரும்பிப் பார்த்துப் போவார்களாக.

இனிவிஜயாளாக மற்றவர்கள் நடித்ததைப்பற்றிச்சிறிது எழுதுகிறேன். இப்பாத்திரத்தைப் பற்றி எனது நண்பர்கள் முதலில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், இப்பாத்திரம் பத்மாவதியைப் போல் நாடகத்திற்கு அவ்வளவு முக்கியமானதல்லவென்பதே. விஜயாள் பாத்திரமில்லாமல் மனோஹரன் நாடகத்தை நடத்தி முடிக்கலாம். ஒரு சந்தர்ப்பத்தில் அவ்வாறே நடத்தி முடிக்க யத்தனம்செய்தேன். (அதைப்பற்றிப் பிறகு எழுதுகிறேன்.) மனோஹரனைக் கதாநாயகனாகக் கொண்ட போதிலும், மனோஹரன் மனைவி கதாநாயகி என்று கொள்ளலாகாது. ஷேக்ஸ்பியர் மஹா நாடகக்கவி எழுதிய ஜூலியஸ் சீசர் (Julius Caeser) என்னும் ஆங்கில நாடகத்தில் ஜூலியஸ் சீசரின் மனைவி கதா நாயகியாவளோ? மனோஹரன் நாடகத்தில் பிரதான ஸ்திரீ பாகம் பத்மாவதியே என்று அதை ஒரு முறை வாசித்தவர்களும் ஒப்புக்கொள்வார்கள். அப்படியிருக்க இந்நாடகத்தை ஆடுவதற்கு எடுத்துக் கொள்ளும் எல்லாச் சபையாரும் பெரும்பாலும், விஜயாள் பாத்திரத்தை அயன் ஸ்திரீ வேடம் தரிக்கும் ஆக்டருக்கு கொடுப்பது வழக்கமாய் விட்டது.

(தொடரும்.)



சென்னை 'பார்க்பேரை' மிஸ்டர் காம்பல் திறந்து வைத்த போது எடுத்த படம். P.P.B.




## ஸ ங் கீ த ம் .

[காபிரைட்.]

(ஸ்ரீமான் ஸி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார், பி. ஏ. எழுதியது.)

பல்லவி.

சம்போ ! மஹாதேவ ! சங்கர !
கிரிஜாரமண !

அனுபல்லவி.

சம்போ ! மஹாதேவ !
சரணாகத ஜன ரக்ஷக !
அம்போருஹ லோசன !
பதாம்புஜ பக்திம்தேஹி

சரணம்.

1. பரமதயாகர ! மிருகதராதர ! கங்காதர !
தரணீதரபூஷண ! த்யாகராஜ வரஹிருதயநிவேச !

2. ஸுரபிருந்த கிரீடமணி வரநீராஜிதபத !
கோபுரவாஸ ! ஸுந்தரேச ! கிரீச ! பராத்பர ! பவஹர !

| | |
|---|---|
| சம்போ, மஹாதேவ, சங்கர ! | —பர்வதராஜனுடைய புத்ரியான பார்வதியின் பதியே ! |
| கிரிஜாரமண | |
| சம்போ, மஹாதேவ ! | —உம்மைச் சரணமடைந்தவர்களைக் காப்பாற்றுகிறவரே ! |
| சரணாகத ஜனரக்ஷக ! | —தாமரை மலர்களைப் போன்ற கண்களை உடையவரே ! |
| அம்போருஹ லோசன | —உமது பாத கமலங்களில் நான் பக்தி செய்யும்படியான பாக்யத்தைக் கொடும். |
| பதாம்புஜ பக்திம் தேஹி | |
| பரமதயாகர | —எல்லையற்ற கருணைக்கடலே ! |
| மிருகதராதர | —மானை மறுவைப்போல் தரிக்கும் சந்த்ரனைத் தலையில் தரிக்கிறவரே ! |
| கங்காதர | —கங்கையைத் தலையில் தரிக்கிறவரே ! |
| தரணீதர பூஷண | —பூமியைப் படங்களில் தரிக்கும் ஆதிசேஷனை ஆபரணமாகத் தரிக்கிறவரே ! |
| த்யாகராஜ வரஹிருதய நிவேச | —த்யாகராஜனுடைய உத்தமமான ஹிருதயத்தை இருப்பிடமாகக்கொண்டவரே |
| ஸுரபிருந்த கிரீட மணிவரநீராஜித பத | —தேவகணங்களின் கிரீடங்களில் விளங்கும் உத்தமமான ரத்னங்களால் ஹாரதி செய்யப்பட்ட பாதங்களையுடையவரே! |
| கோபுரவாஸ | —கொவ்வூரென்ற திவ்ய க்ஷேத்ரத்தில் எப்பொழுதும் விளங்குகிறவரே! |
| ஸுந்தரேச | —அழகே உருவெடுத்து வந்ததென்று சொல்லத் தகுந்தவரே ! |
| கிரீச | —கைலாஸபதியே! |
| பராத்பர | —மேலான பொருள்களுக்கெல்லாம் மேலானவரே ! |
| பவஹர | —ஸம்ஸாரத்தைப் போக்குகிறவரே ? |

சென்னைக்கடுத்த கொவ்வூரென்ற திவ்ய க்ஷேத்ரத்தில் எழுந்தருளியிருக்கும் பரமசிவனுடைய மூர்த்தங்களில் ஒன்றான ஸுந்தரேச்வரருடைய ஸந்நிதியில ஸ்ரீ ஸத்குரு த்யாகராஜ ஸ்வாமிகளால் பாடப்பட்ட கீர்த்தனங்களில் இது ஒன்று. மேலும், ஸ்வாமிகள் ஸம்ஸ்கிருதபாஷையில் அருளிச்செய்த கீர்த்தனங்களில் இதொன்று.

ஸ்வாமிகள் க்ஷேத்ரயாத்ரை செய்யும்பொழுது சென்னைக்கு விஜயஞ்செய்தார். பங்கார்வீதியில் தங்கியிருந்தாரென்று கேள்வி. கொவ்வூர் ஸுந்தரேச முதலியாருடைய மாளிகையில் ஸகல உபசாரத்துடன் அந்தக் கனவானால் ஆதரிக்கப்பட்டார். அக் காலத்தில் சென்னை சில வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டு, கொல்லா கன்னைய செட்டியார், மணலி முதலியார், ஸுந்தரேச முதலியார் என்ற ஸ்ரீமான்களால் ஆளப்பட்டதென்று சொல்லுவதுண்டு. ஸ்வாமிகள் அங்கு வந்த காலத்தில் ஏறக்குறைய எல்லா ப்ரபல கர்நாடக ஸங்கீத ஸாஹித்ய வித்வான்கள் அங்கே கூடியிருந்ததாகவும், ஸ்வாமிகள் தங்கியிருந்தவரையில் அவருடன் காலங்கழித்ததாகவும் அவருடைய முக்ய சிஷ்யர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஏழு நாள்கள் வரையில் ஒவ்வொரு இரவிலும் தேவகாந்தாரி ராகத்தை விஸ்தாரமாக ஆலாபனம் செய்து வந்தாரென்றும், அதில் க்ஷீரஸாகரசயன, நாமொராலகிம்ப, ஸீதாவர ஸங்கீத ஞானமு, பாலய ஸ்ரீரகுவீர, ஸ்ரீ துளஸம்ம, கருணாஸமுத்ர, கொலுவை யுன்னாடே, தனலோனே த்யானிஞ்சி, மாவகரா, ஸ்ரீரகுவர, ஈமஹினி, எவருமனகு வென்ற கீர்த்தனங்களைப் பாடினாரென்றும் சொல்லுகிறார்கள்.

கொவ்வூர் ஸுந்தரேச முதலியார் ஸ்வாமிகளிடத்தில் பரமபக்தி வைத்தவர், சென்னைக்கு வரவேண்டுமென்று திருவையாற்றிற்குப் போய் அழைத்தவர். ஆயினும் இரவும் பகலும்போல் கர்மகதி பல அம்சங்கள் கலந்து நிற்குமல்லவா? ஸ்வாமிகளின் தர்சனமும் ஸல்லாபமும் அவரை ஆதரிக்கும் பாக்யமும் அவருடைய கானத்தைக் கேட்கும் பாக்யமும் நேர்ந்தது முதலியார் செய்த புண்ய கர்மத்தின் பலனாகும்.

ஆனால் பாப கர்மத்தின் பயன் எவ்விதமாக வெளிப்பட்டது? ஸ்வாமிகள் அருளிச்செய்யும் திவ்ய கீர்த்தனங்கள் காலமுள்ளவரையில், தேசமுள்ளவரையில் விளங்குமென்று முதலியார் நிச்சயித்தார். தனக்கும் அவ்விதமான சிரஞ்ஜீவித் தன்மை கிடைப்பதற்கு உபாயம் அந்தக் கீர்த்தனங்களில் தன் பெயரும் எங்கேயாவது கலந்திருப்பதே போதுமென்று நிச்சயித்தார். ஆனால் இந்த மனோரதத்தை ஸ்வாமிகளிடத்தில் சொல்லத் துணிவாரா? அந்தரங்க சிஷ்யர்களிடத்தில் ரஹஸ்யமாகத் தெரிவித்தார். அவர்களும




### குழந்தைகளுக்கு ஆகாரமளிக்கும் முறை.

பிறந்த குழந்தைகளுக்கு ஆரம்பமுதல் சரியான முறையில் ஆகாரமளிக்கவேண்டும். குழந்தை பிறந்ததினம் முதல் நான்கு மணி நேரத்திற்கொரு முறை குழந்தைக்குத்தாய்ப்பாலூட்ட வேண்டும். ஒவ்வொரு தடவையும் மெள்ள மெள்ள பாலூட்டும் நேரத்தை யதிகரிக்கவேண்டும். இது மிகவும் அவசியமாகக் கவனிக்கவேண்டிய விதியாகும். குழந்தை பாலூட்டினால் தான் பால் கிரமமாக சீக்கிரமாக வரும். குழந்தையை வெகு நேரம் ஊட்டவிடக் கூடாது. இதற்கு இரண்டு காரணங்களுண்டு. வெகு நேரம் ஊட்டும்படியாக விடுவது கெட்ட பழக்கமாகும். மேலும் பால் நின்றபிறகும் ஊட்டவிட்டால் அடுத்த தடவை பாலிருக்கும் பொழுது குழந்தை பாலை உட்கொள்ளாது. மேலும் அதிநேரம் பாலூட்டும் படியாக விட்டால் ஸ்தனங்களில் வெடிப்பு ஏற்படும்.

ஐந்து நாட்களுக்குப் பிறகு குழந்தைக்கு அஜீர்ணமோ அல்லது வேறுவிதமான அசௌக்கியமோ ஏற்படாமல் உட்கொள்ளும் ஆகாரம் போதுமானதாகவிருந்தால், படிப்படியாக குழந்தைக்கு ஒவ்வொரு தடவையும் 20 நிமிஷங்கள் வரையில் தாய்ப்பாலூட்டலாம். அந்தக்காலத்தை எக்காரணத்தாலும் அதிகரிக்கக் கூடாது. சாதாரணமாக இவ்வளவு காலம்கூட அநாவசியம். அதற்குள்ளாகவே போதுமான ஆகாரம் கிடைத்துவிடும். தவிரவும் ஒவ்வொரு குழந்தையையும் ஜாக்கிரதையாக கவனித்தல் அவசியம். சில வேளைகளில் குழந்தைகளின் நிறையை எடுத்தல் நலமாக விருக்கும். பாலூட்டும் முன்பு குழந்தையின் நிறையை யெடுத்துக்கொண்டு பாலூட்டின பிறகும் முன்பு அணிந்து கொண்டிருந்த உடைகளுடனேயே மறுபடியும் குழந்தையின் நிறையை யெடுத்து வித்யாசத்தைக் குறித்துக்கொள்ள வேண்டும். 24 மணி நேரம் ஆகாரமளிக்கும் ஒவ்வொரு தடவையும் இவ்விதமாகச் செய்து வித்யாசங்களைக்கூட்டிவைத்துக்கொள்ள வேண்டும்.

குழந்தைக்கு ஆகாரமளிக்கும் போது தாயும குழந்தையும் சுகமான நிலையிலிருக்கவேண்டும். அந்த அறையில் கண்டபடி மனிதர்கள் வந்து தாயின் கவனத்தை மாற்றும்படியாகச் செய்யக்கூடாது. இரவில 10 மணியிலிருந்து காலை 6-மணி வரையில் குழந்தைக்கு ஆகாரம் கொடுக்கக்கூடாது. சில வேளைகளில் இரவு 11-மணிக்கும் காலை 5 மணிக்கும் ஆகாரமளிப்பது அவசியமாகவிருக்கலாம். ஆனால் இதை மெதுவாக முன் கூறின படி மாற்றிவிட்டு தாயும் குழந்தையும் தூங்கும்படியாகச் செய்வது இருவருக்கும் நலம். காலையில் முதல்தாம் ஆகாரமளிப்பது சற்று முன்பின்னாகவிருந்த போதிலும் இரண்டாம்தாம் கொடுப்பது சரியாக வழக்கமான நேரத்திற்கே கொடுக்கவேண்டும். காலை 9-மணிக்கு இரண்டாம் தாம் ஆகாரமளிக்கும் வழக்கமாக விருந்தால் அந்த காலம் தவாவே கூடாது. இவ்விதம் குழந்தை பிறந்த இரண்டு வாரங்கள் குழந்தைக்கு சரியானமுறையில் ஆகாரமளித்து வந்தால் குழந்தை நல்ல ஆரோக்பத்துடன் வளரும்.

இரவில் குழந்தை விழித்துக் கொண்டால் அதை சுகமாக படுக்க விடவேண்டும் அப்படியும் அழுதால் சர்க்கரை சேர்க்காத வெந்நீர் சிறிது கொடுக்கலாம். சர்க்கரை சேர்ப்பது கூடாது. சர்க்கரை சேர்த்தால் தித்திப்பில்லாத உணவை உட்கொள்ளாது. பாலூட்டும் நேரத்தைத்தவிர மற்ற சமயங்களில் குழந்தையை தாய்படுக்கையில் விடக்கூடாது. குழந்தை அழும்போதெல்லாம ஆகாரமளிக்கக் கூடாது. அதனால் குழந்தை வேண்டிய ஆகாரத்திற்கு மேல் அதிகமாக உட்கொண்டு அஜீர்ணத்தால் கஷ்டப்படும். குழந்தைக்கும் தாயாருக்கும் தூக்கம் கெட்டு விடும். இரவில் பாலூட்டுவது தாயாருக்கும் அதிக பலஹீனத்தை உண்டாக்கும்.

மூன்று மணிநேரத்திற் கொரு தாம ஆகாரமளிப்பதை விட நான்கு மணி நேரத்திற்கொரு தாம் ஆகாரமளிப்பது நலமென்று டாக்டர் டிரூபிகிங் அபிப்பிராயப்படுகிறார். அதனால் குழந்தைகள் அதிக நேரம் தூங்கலாம். அடுத்த தாம் ஆகாரமளிக்கையில் குழந்தைக்கு நல்ல பசியாக விருக்கும். தாயார்களுக்கும் இதர காரியங்களைக் கவனிக்கவோ, அல்லது பலஹீனமில்லாமலிருக்கவோ ஹேதுவாகிறது. ஆனால் குறித்த காலம் தவறாமல ஆகாரமளிக்க வேண்டும். குழந்தை தூங்கினாலும் ஆகாரமளிக்கும் நேரமாகிவிட்டால் எழுப்பிப் பாலூட்டலாம்.

குழந்தை பிறந்த மூன்று நான்கு தினங்களுக்குப் பாலிருப்பதில்லை. அதனால் குழந்தைக்குப் பாலூட்டுவதை நிறுத்தக் கூடாது. மூன்று மணிக்கொருதாம் பால வரும் வரையில்குழந்தையைத்தாயிடம் கொடுத்துப் பிறகு அதற்கு வேறு ஆகாரம் கொடுக்கவேண்டும். இதுவே சரியான முறையாகும். பால் கொடுக்கும் முன் தாயார் சிறிது வெந்நீர் அருந்திவிட்டுக்குழந்தைக்குப்பாலூட்டலாம். அவள் வேண்டிய ஆகாரத்தை சாப்பிடலாம். ஆனால் அஜீர்ணப்படுத்தும் ஒன்றையும் சாபபிடக் கூடாது.

தாயும் குழந்தையும் நல்ல காற்றோட்டமான விடத்திலிருக்கவேண்டும்.

---

கேவலம் ஏழை ப்ராமஹ்ணர்கள். பூர்வ புண்ய கர்மததால் ஸ்வாமிகளுடைய சேர்க்கை கிடைத்தும் பாபகர்மத்தால் வறுமையும் அதைத் தீர்ப்பதற்குத் தனத்தில் ஆசையும் மேலோங்கின. முதலியாரவர்களிடத்திலிருந்து ஏராளமான த்ரவியத்தைப்பெற்று ஸுகமாக வாழலாமென்று யோசித்து, ஸ்வாமிகள் கிருபையுடன் வீற்றிருந்த ஸமயததில் வணக்கமாக முதலியாருடைய கோரிக்கையைத் தெரிவித்தார்கள். ஆனால் ஸ்வாமிகள் அதை நேராய் மறுக்க மனமில்லாமல் அப்படிச் செய்யவும் இணங்காமல் ஒரு நடுவழியைக் கைக்கொண்டார். முதலியாருடைய பெயர் ஸுந்தரேசர், முதலியாருடைய க்ராமமான கொவ்வூரில் விளங்கும் பகவானுடைய பெயரும் ஸுந்தரேசர்; ஆகையால் அந்த க்ஷேத்ரத்தைத் தர்சனஞ் செய்யவேண்டுமென்று முதலியாருக்குச் சொல்லிப் பரிவாரங்களுடன் அங்கேபோய் சிலநாள் தங்கி, ஸுந்தரேச வென்ற திருநாமத்தை வைத்துத் தன் முத்ரையுடன் சில கீர்த்தனங்களைப் பாடிப் பகவானுக்கு அர்ப்பணஞ்செய்தார். எப்படியாவது தன்பெயர் இருந்தால் போதுமென்ற எண்ணத்தால் அவர் பரமானந்த மடைந்தார். சிஷ்யர்களுக்கு 2000 ரூபாய் பஹுமானமாகக் கொடுத்தார். அது எந்த ஆபத்தை விளைவித்ததென்று 'முந்து வெனுக' வென்ற கீர்த்தனத்தின் உரையில் எழுதுவோம்.

காமவர்த்தனி — ரூபகம்

[ரிஷபம் தைவதம் சுத்தம் சம்பூர்ணம்]

பல்லவி.

சம் போ ம ஹா தே வ சங் க ர கி ரி ஜா ர ம ண
ஸாஸ ஸநிதா பம கா மா ப பாம கா ரி ஸ ஸ ஸரிகரிகா மா ப த

அனுபல்லவி.

சம் போ ம ஹா தே வ ச ர ணா க த ஜ ன ர க்ஷ க
பா பா பத ச ஸா ஸ ஸ ஸ ஸா ஸ நி தா நீ ஸாநி தா பம
அம் போ ரு ஹ லோ ச ன ப தாம் பு ஜ பக் திம் தே ஹி
ஸா ஸரிகா ரீ ஸநி ஸநிதா நி ஸ ரீ ஸா ஸநி த பா பதபபம கமபதநி ஸ

சரணம்.

ப ர ம த யா க ர மிரு க த ர த ர கங் கா த ர த ர ணீ
ப ப ப ப பா பத பத மத பத ப ம ப த நீ ஸா நீ த நீ த பா
த ர பூ ஷ ண த்யா க ரா ஜ வ ச ஹி ரு த ய நி வே சா
ஸா ஸ ஸநிதா ப ம கா க க ஸ ஸ ரி க ம ம ப த மா பா

(இரண்டாவது பாகம் அனுபல்லவியைப் போன்றது.)

# நௌரோஜ் விழா.

## ஓர் ராஜபுத்திர மாதின் வீரச்செயல்

(ஸ்ரீமான் என். கே. அய்யர் எழுதியது)

அக்பர் பாதுஷாவின் காலத்தில், நௌரோஜ் என்ற பெயரையுடைய ஒரு விசேஷக் கொண்டாட்டம் நடைபெற்று வந்தது. அது வருஷத்திற் கொருமுறை ஒன்பது தினங்கள் நடைபெற்றதால், அதற்கு நௌரோஜ் என்ற பெயர் வந்தது. அது அநேகமாக நமது நவராத்திரி பண்டிகையை ஒத்ததாகும். வெளியில் விமரிசையான கொண்டாட்டங்கள் நடைபெறுவதுடன், ஸ்திரீகளுக்கென்றே பிரத்யேகமான சில வேடிக்கைகள் அவ்விழாவின் சம்பந்தமாக ஏற்படுத்தப் பட்டிருந்தன. அவைகளில் அக்பர் பாதுஷாவின் அந்தப்புரத்து ஸ்திரீகளும், இன்னும் அவர் மக்கள், பந்துக்கள், நாட்டின் பிரமுகர்கள், உயர்ந்த அதிகாரிகள், ராஜாக்கள், ஜமீன்தார்கள், படைத்தலைவர் முதலியவர்களது குடும்பங்களைச் சேர்ந்த உயர் வகுப்பு ஸ்திரீகள் எல்லோரும் கூடி, அந்நாட்களை மிகுந்த குதூகலத்துடன் கழிப்பது வழக்கம். அவர்கள் அந்நாட்களுக் கென்றே வருஷம் முழுவதும் பாடுபட்டு, ஏதாவது நூதனமான சாமான்களைத் தயாரிப்பார்கள். அவ்விழா ஆரம்பித்தவுடன், அவரவர்கள் தயாரித்திருக்கும் சாமான்களை யெடுத்துவந்து, கடை வைப்பார்கள். அக்கடைகள் ஒரு 'கொலு' மாதிரியாகவும், வேடிக்கையாகப் பொழுது போக்கும் நிமித்தமும் வைக்கப்படுவதால், அவைகளை வைத்திருக்கும், உயர்ந்த பதவியையுடைத்த ராஜ ஸ்திரீகளுங்கூட, தெருவில் விற்கும் சில்லரை வர்த்தகர்களைப்போல், தாம் கூறும் விலையைப் பெறும்பொருட்டு, வாதாடித் தகராறு செய்வார்கள். ஒரு பைசா விலை பெறுமான சாமானுக்கு ஆயிரம் ரூபாய் கேட்பார்கள். வாங்குபவர்கள், ஆயிரம் ரூபாய்க்கு ஒரு காலணா குறைத்து விலை கேட்பார்கள். அந்தக் காலணாவை இருவரும் விடாமல், அதற்காக வெகு நேரம் தர்க்கஞ் செய்வார்கள். கடைசியில், அவ்விலையைக் கொடுத்து வாங்கிப் போவார்கள். இவ்வாறு, உயர் வகுப்பு ஸ்திரீகள் ஒருவர்க் கொருவர் சிநேகஞ் செய்துகொள்வதும், ஞாபகார்த்தமாக வைத்துக்கொள்ளும் பொருட்டுத் தமக்கிஷ்டமான சாமான்களை வாங்கிப் போவதும் இவ்விழாவில் வழக்கம். ஓர் சமயத்தில், ஒரு உயர்ந்த அந்தஸ்துள்ள ஸ்திரீ, கற்கண்டு கட்டியொன்றை வைத்துக்கொண்டு, அது உயர்ந்த வைரமென்று வாதாடி, அதன் விலையாகப் பாதுஷாவிடமிருந்து லக்ஷம் ரூபாய் கேட்டுப் பெற்றதாகவும் ஓர் கதை சொல்லப் படுகின்றது.

அக்பர் பாதுஷாவும் இவ் விழாவுக்குச் செல்வதுண்டு. அவர் பெண்வேடந்தரித்து, கடைகளை, அவர்கள் கேட்கும் ஏராளமான விலை கொடுத்து வாங்கிப்போவது வழக்கம். அவர் மனைவி மக்களும், அவ் விழாவில் லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவு செய்வார்கள்.

அக்பர் பாதுஷாவின் சபையில் பிரித்திவி ராஜனென்று பெயர் பூண்ட ஒரு ராஜபுத்திர இளவரசனிருந்தான். அவன் மார்வாட் வம்சத்தைச் சேர்ந்த ஜோத்பூர் ராஜாவின் இளைய மகன். அவன் மனைவி பெயர் ோன மேவாட் வம்சத்தைச் சேர்ந்த சித்தூர் அரசக் குடும்பத்தி லுதித்த மாது. பிரித்திவி ராஜன் மிகவும் வீரம் படைத்தவன். அத்துடன், அவன் பல கல்விகளிலுந் தேர்ந்து அரிய கவிகள் புனையுந் திறமைவாய்ந்து அக்காலத்துக் கவிகளுள் பிரதானமானவனாகவும் கருதப்பட்டான். ராஜபுத்திரர்கள் பொதுவாகவே எதிரிக்குப் பயப்படாமல், தம்மனதிலுள்ளதைச் சொல்லிவிடுஞ் சுபாவமுடையவர்களாயினும், பிரித்திவி ராஜன், அவர்களனைவரிலும் அதிக தைரியத்துடன் பேசுந் திறமை வாய்ந்தவன். அவனது தைரியத்தையும், நேரான சுபாவத்தையும் மெச்சி, அக்பர் பாதுஷா அவனை மிகுந்த அன்புடனும், மரியாதையுடனும் நடத்தி வந்தார்.

பிரித்திவிராஜன் மனைவி ஒரு நாள் நௌரோஜ் விழாவைப்பார்க்கச் சென்றாள். அவள் வெகு நேரம் அங்கு மிங்கும் சென்று வேடிக்கைகளெல்லாம் பார்த்துவிட்டுத் திரும்புகையில், நேரமாய் விட்டது. அச்சமயத்தில் அக்பர் பாதுஷா அவளைப் பார்க்கலாயினர். அவள் யௌவனத்தையும், முகலாவண்ணியத்தையுங்கண்டு, பாதுஷாவின் மனதில் மோக வெறி யுண்டாயிற்று. அவளை எப்படியாவது மடக்க வேண்டுமென்று பாதுஷா நிச்சயித்தார்.

நௌரோஜ் விழா நடைபெறும் விஸ்தாரமான கட்டிடங்களி னிடையே அநேக சிறிய சந்துகளும், சுற்று வழிகளும் அமைக்கப் பட்டிருந்தமையால், எவராயினும் ஒரே வழியைப் பிடித்து அதனுள்ளே செல்வதும், வெளியே வருவதும் மிகவும் கடினமாயிருக்கும். அவ்வாறிருக்க, அக்பர் பாதுஷா அவள் வெளியே போவதைத் தடுக்கவெண்ணி, அவளுக்குத் தப்புவழி காட்டுவிக்கும்படிச் சிலரைத் திட்டஞ்செய்திருந்தார். அதன்படியே அவள் வழிதப்பி, அங்குமிங்கும் அலைந்து, கடைசியில் பாதுஷாவின் மாளிகையையடுத்த ஓர் சுரங்கத்தினுட் போய்ச் சேர்ந்தாள். சிறிது தூரஞ்சென்றதும், அவள் பின்னாலிருந்த கதவு மூடப்பட்டது.

காசியில் நடந்த அகில ஆசியா கல்வி மகாநாட்டிற்குச் சென்றிருக்கும் சென்னைப் பிரதிநிதிகள். C. Bro.

அவள் முன்னும் மூடிய கதவே காணப்பட்டது. இவ்வாறு சுரங்கத்தின் நடுவிலகப்பட்டுக்கொண்டு, வெளியே செல்ல வழியறியாமல், அவள் தவித்துக்கொண்டிருக்கையில், அக்பர் பாதுஷா தனது நிஜரூபத்தில் அவள் முன் வந்து நின்றார். தன்னந்தனியே ஏகாந்தமான விடத்தின் நடுவில் அவரைக் காணவும், அவள் பயந்து கூச்சலிட்டாள். ஆனால் அவள் கூச்சலைக் கேட்பவர் அங்கு எவருமில்லை. பாதுஷா அவளிடம் தன் கெட்ட எண்ணத்தைத் தெரிவித்தார். அவளுக்கு ஏராளமான திரவியமும், விலையுயர்ந்த ரத்னாபரணங்களும், அவள் புருஷனுக்கு உயர்ந்த பதவியும் கொடுப்பதாக வாக்களித்துத் தன்னிஷ்டத்தைப் பூர்த்தி செய்யும்படி வேண்டினர்.

பிரித்திவி ராஜன் மனைவி ராஜபுத்திர ஸ்திரீ. அதிலும் அவள் மேவாட் ராஜ குலத்தி லுதித்தவள். அவள் குலத்தின் தலைவன் ராணா பிரதாப சிம்மன் மாத்திரம் அக்பருக்குத் தலை குனியாமல், சண்டையில் தோல்வியடைந்தும், நாடு நகரங்களையிழந்தும், சகிக்கத் தகாத கஷ்டங்களை யனுபவித்துக்கொண்டு அரவலி மலையின்மீது ஆரண்ணியவாசம் புரிந்து வருகின்றார். அப்பேர்ப்பட்ட வீர வம்சத்தி லுதித்த அம்மாது, பயத்தாலோ அல்லது பேராசையாலோ தூண்டப்பட்டுத் தன் கற்பையிழக்கச் சம்மதிக்கவில்லை. அத்தகைய ஆபத்தான நிலைமையிலும் அவள் சுபாவீகமான தைரியம் அவளை விட்டகலவில்லை. அவள் கோபங்கொண்டு, பாதுஷாவின் வேண்டுகோளை மறுத்து அவ்விடத்தை விட்டகல வழிதேடினாள். ஆனால், அவளுக்கு வெளியே செல்லும் வழி யெதுவும் அகப்படவில்லை. பாதுஷாவும் அவளை விட்டு விடுவதாகக் காணப்படவில்லை. அவள் கைகளை கெட்டியாகப் பிடித்துக்கொண்டார்.

இவ்வாறிருக்கையில், அவள் தன் பலத்தால் பாதுஷாவின் பிடிகளின்றும் திமிறிக்கொண்டு, தன் இருகரங்களாலும் அவரைப்பிடித்துக் கீழே தள்ளி, எழுந்திருக்க விடாமல் பலமாக அமர்த்திக்கொண்டாள். அதன் பின் தன் அரையில் சொருகியிருந்த கட்டாரியை உருவி, பாதுஷாவின் மார்புக்கு நேராக வைத்து அவரைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்தினாள். இப்போது பாதுஷா, தன்னை விட்டுவிடும் பட்சத்தில், அவளுக்கு வேண்டியதை யெல்லாந் தருவதாக வாக்களித்து மன்றாடினர். ஆனால் அவள் வேறொன்றுங் கேட்கவில்லை. பாதுஷாவாகவும், பிரஜைகளுக்குத் தகப்பனாகவும் இருந்து வரும் அவர் செய்யத் துணிந்த செயல் மிகவும் தவறானதென்றும், அவரே அவ்வாறு அநீதச் செயல் செய்யத் துணிந்தால், அவர் பிரஜைகள் எவ்வாறு செய்யமாட்டார்களென்று எடுத்துக்காட்டி, அதிலிருந்து இனி எப்போதும் அவர் பர ஸ்திரீகள் எவரையும் இவ்வாறு உபத்திரவஞ் செய்வதில்லையென்றும், தனக்குரிமையல்லாத எந்த ஸ்திரீயைக் கண்டபோதிலும், அவளைத்தன் தாய்க்குச் சமானமாக பாவிப்பதாகவும், பிரமாணஞ் செய்து கொடுக்கும்படி வற்புறுத்தி, அவ்வாறு செய்தபின்னரே அவரை விட்டுவிட்டாள். அதன்பிறகு பாதுஷாவே அவளை வெளி வாசற்படிவரைக்கும் அழைத்துச்சென்று வழியனுப்பிவிட்டு வந்தார்.

அக்பர் பாதுஷா மிகவும் உயர்ந்த தன்மையையுடையவர். அவர் இச்செயலுக்காகப் பிரித்திவி ராஜன் மீதாவது, அவன் மனைவியின் மீதாவது கோபங் கொள்ளவில்லை. அவர் தான் செய்த தவறுதலை யுணர்ந்து, ஓர் கற்புடைய ஸ்திரீ தனக்கு நேர்மையான வழியைக் காட்டித் தீமையினின்றும் விலக்கியதற்காகச் சந்தோஷித்து அதன் பின் தன் வாழ்நாள் முழுவதும், தான் எடுத்துக்கொண்ட பிரமாணத்தினின்றுந் தவறாது நடந்துவந்தார்.



அமெரிக்கா ஐக்கிய மாகாண கப்பற்படையைச் சேர்ந்த பெரிய நீர்மூழ்கிக்கப்பல் "வீ—5" முழுவேகத்துடன் செல்லும் காட்சி. G.S.A.



ஒரே தினத்தில் நான்கு கன்றுகளை ஈன்ற பசுவும் அதன் குட்டிகளும். (கானடாவில் மானிடோபாவைச் சேர்ந்த மிஸ்டர் லாஸன் இந்தப் பசுவின் சொந்தக்காரர்.) G.S.A.



லண்டன் ஸர்வகக்ஷி மகாநாட்டுப் பிரதிநிதியான பர்லாகிமிடி ராஜா லண்டன் ஹைட்பார்க்கில் நான்கு குதிரைவண்டியை ஓட்டக் கற்றுக்கொள்ளும் காட்சி. G.S.A.



சென்னை புதிய ஷெரீப் திவான்பகதூர் ஏ. எம். எம். முருகப்பச் செட்டியாருக்கு அளிக்கப்பட்ட வன போஜனக் காட்சி. ஸர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் முதலிய கனவான்கள் வந்திருந்தனர். P.P.B.



நகர்ந்து செல்லும் மலை. ஐரோப்பாவில் ஸ்விட்ஜர்லண்ட் தேசத்தில் கில்சன்ஸ்டாக் என்ற மலை தினம் ஒரு ஸெண்டிமீடர் வீதம் நகர்ந்து செல்கிறது. அதனால் அடிவாரத்திலுள்ள விண்தால் என்ற நகரம் ஆபத்திற்குள்ளாகும் போலிருக்கிறது. படத்தில் காணப்படும் வெள்ளைக்கோடு அந்த நகரத்தைக் காண்பிக்கிறது. அம்புக்குறி மலைச்சரிவைக் காண்பிக்கிறது.



95 குதிரை வலிவு பெற்ற என்ஜினுடன் கூடினதும் 104 பிரயாணிகளை ஏற்றிச் செல்லக்கூடியதுமான பஸ். G S A.



ஆந்திர மாகாண ஸ்திரீகள் மகாநாட்டில் தலைமை வகித்த டாக்டர் கே. லக்ஷ்மிதேவி.



சென்னை உதவி சுகாதார டைரக்டராக நியமிக்கப்பட்ட டாக்டர் (மிஸஸ்) வீரசிங்கி சின்னப்பா எம் பி பி எஸ் P.P.B.



திருவனந்தபுரம் ஸ்ரீ மூலம் சட்ட சபையில் ஸ்திரீ மெம்பர்கள் முதல் தரமாக தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஸிரியன் பிராடஸ்டன்ட் வகுப்புப் பிரதிநிதியான மிஸஸ் ஆனு சாண்டி எம். ஏ. பி. எல். P.P.B.



திருவநந்தபுரம் ஸ்ரீ மூலம் சட்ட சபையில் ரோமன் காதோலிக் வகுப்புப்பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மிஸஸ் பெருனு மோஸஸ் P.P.B



மதுரையில் சென்னை மந்திரி ஸ்ரீமான் பீ. டி. ராஜன் தலைமையின்கீழ் நடந்த ராமநாதபுரம் ஜில்லா போர்ட் ரிகிரியேஷன் கிளப் முதல் வருஷாந்தக் கொண்டாட்டம். P.P.B.



21-12-30 ந்தேதி திருச்சியில் அகில இந்திய தபால் ஆர். எம். எஸ் யூனியன் திருச்சி ஜில்லாப் பிரிவின் மகாநாடு கூடியபோது எடுத்தபடம். P.S.

# இயற்கை விநோதங்கள்.

## The Wonders of Nature.

[காபி ரைட்]

(வே. இரா. சு. எழுதியது.)

மரங்களின் வயதை எப்படியறியலாம்?—சில மரங்களின் வாழ்நாட்களை உத்தேசமாய்த்தான் சொல்லலாம். ஆனால் சிலவற்றின் வயதைச் சரிவர நிர்ணயிக்க முடியும். உதாரணமாக, பக்கக்கிளைகள் முளைக்காமல் வளரும் தென்னை, பனை, பாக்கு, முதலிய மரங்களின் வயதை அவைகளின் அடித்தண்டிலுள்ள வளையங்களைப்போல் தோன்றும் ஒருவித தோற்றங்களைக் கொண்டு கண்டு பிடித்துவிடலாம்.

அநேகமாய் எல்லா மரங்களின் வயதையும் அவைகளின் அடித்தண்டைக் குறுக்கே அறுத்து அத்தண்டின் தோற்றத்திலிருந்து சொல்லி விடலாம். ஏனெனில், ஒவ்வொரு மரத்திலும், மழைக்கால வளர்ச்சிக்கும் வெய்யிற்கால வளர்ச்சிக்கும் வித்தியாசம் இருக்கிறது. இவ்வித்தியாசம் அவைகளின் அடித்தண்டின் அமைப்பிலும் தோன்றுகிறது. அத்தண்டில் ஒவ்வொரு வருஷத்தின் வளர்ச்சியும் ஒவ்வொரு வட்ட வடிவமுள்ள வளையம் போன்ற ஓர் உருவத்தினாற் காணப்படுகிறது. ஆதலால் அத்தண்டை யறுத்து அதிற்றோன்றும் வளையங்களின் எண்ணிக்கையிலிருந்து அம்மரத்தின் வயதையும் கூறிவிடலாம்.

நடுக்கடலில் எப்படி திசைகளை அறியமுடியும்?— முன் காலத்தில் மாலுமிகள் நடுக்கடலில் போய்க்கொண்டிருக்கையில் நக்ஷத்திரங்களைக் கொண்டே திக்குகளை யறிந்துவந்தனர். நக்ஷத்திரங்களில் ஆங்கிலேயத்தில் "போல்ஸ்டார்" என்னும் நம் தமிழ் மொழியில் "துருவன்" என்னும் பெயர் பெற்ற நக்ஷத்திரமானது எப்பொழுதும் வடக்கு நோக்கியே யிருக்கிறதென்னும் உண்மை அவர்கட்குத் தெரிந்திருந்தது. இந்நக்ஷத்திரம் பகலிலும் வானத்தில் மப்புமந்தாரமின்றியிருக்கையில் தெரிகிறதாகையால், இரவிலும் பகலிலும்கூட இந்நக்ஷத்திரத்தைக் கொண்டே அவர்கள் திசைகளை அறிந்து வந்தனர்.

இப்பொழுதோவெனில் "திசைகாட்டுங்கருவி" என்னும் ஓர் சிறிய கருவியானது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அதில் காந்தம்என்னும் ஓர் சக்தியையுடைய ஊசியொன்று தொங்கவிடப்பட்டிருக்கிறது. அவ்வூசியானது காந்தமேற்றியிருப்பதால் எப்பொழுதும் தெற்கு வடக்காகவேயே நோக்கிப் பொருந்தியிருக்கும் தன்மையையுடையதாயிருக்கிறது. அதைக் கொண்டு எந்த வேளையிலும் கப்பல் போக்கிச்செல்லும் திக்கைக் கண்டுபிடிப்பது இயலுகிறது.

சில நாட்களில் ஏன் உஷ்ணமதிகமாயிருக்கிறது?—சில நாட்களில் மீதி நாட்களைவிட அதிக உஷ்ணமாயிருப்பதாக நாம்உணருவதற்குப்பலகாரணங்கள் உண்டு. சில மாதங்களில் சூரியன் நமதலைக்கு நேராகத் தோன்றி மறைவதையும், சில மாதங்களில் சற்று வடக்கேயோ தெற்கேயோ தள்ளியே தோன்றி மறைவதையும நாம் பார்த்திருக்கலாம். கோடை கால மாதங்களில் சூரியன் தலைக்கு நேராகவே தோன்றுகிறான். அப்பொழுது அங்கிருந்து நம் பூமிக்கு வரும் கிரணங்கள் செங்குத்தாகவே இருக்கின்றன. மழை காலத்திலும் பனி காலத்திலும் தலைக்கு நேர் உச்சியிலில்லாமல் ஏதாவது ஒரு பக்கத்தில் தள்ளியே சூரியன் தோன்றுவதனால் சூரிய கிரணங்கள் சற்று சாய்வான கதியுடனேயே நம் பூமியை யடைகின்றன. கிரணங்கள் செங்குத்தாய் வருவதைவிட சாய்ந்த கதியுடன் வரும்போழ்து அவை காற்றினுள் அதிகமாக ஊடுருவி வருவதால் அவைகளின் உஷ்ணமும சாய்ந்து வரும்போது குறைகிறது. ஆதலால்தான் கோடை காலச் சூரியன் அதிக வெப்பத்தைக் கொடுக்கிறான்.



விஜய நகரம் கிரிகட் கோஷ்டியும் இலங்கை ஜான்ராக்வுட் கிரிகட் கோஷ்டியும். (இடது புறமிருந்து நான்காவது விஜயநகரம் மகாராஜ குமாரர். அவரது வலதுபுறம் ஜாக் ஹாப்ஸ்) G.S.A.



வண்ணாரப்பேட்டை பாதுகாப்புச் சங்க மாணவர்களின் போட்டி விளையாட்டுக் காட்சி. P.P.B.

சில சமயங்களில் வெப்பமானது நாம் வசிக்கும் பாகத்தை நோக்கி வீசும் காற்றையும் நாம் வசிக்குமிடத்திற் கருகாமையிலிருக்கும் இயற்கை யமைப்புகளையும பொருத்ததாயுமிருக்கலாம். உதாரணமாக, குளிர்ந்த காற்று வீசும்பொழுது இருப்பதைவிட வரட்டு வெப்பக் காற்று வீசுகையில் நமக்கு அதிக உஷ்ணமாக இருக்கிறது. மலை யடிவாரத்திலுள்ள விடங்களைவிட சமுத்திரக் கரையிலுள்ள ஊர்கள் வெப்பக் குறைவுள்ளனவாக யிருக்கும்

சூரிய கிரணங்களின் வெப்பத்தைக் காற்றிலுள்ள நீராவியின் நிலையும் மாற்றலாம். உதாரணமாக, காற்றில் அதிக நீராவியிருந்தால் நம்முடலிலிருந்து வெளியே வரும் வியர்வை நீரானது காற்றிற் கலக்க முடியாமற் போகுமாதலால் நமக்கு அன்று அதிக உஷ்ணமாகவிருப்பதுபோல் தோன்றும். வெய்யில் நாளிலும், காற்றில் நீராவியின்றி வரண்டிருந்தால், நம்முடலிலுள்ள வியர்வை எளிதில் அதிக உஷ்ணமாகத் தோன்றுது.

நக்ஷத்திரங்கள் கீழே விழுகின்றனவா?—உண்மையில் நக்ஷத்திரங்கள் என்னும் உருக்கள் நம் பூமியினிடம் வந்து விழவில்லை. அப்படி ஏதாவது ஓர் நக்ஷத்திரமும் நம் பூமியும், சந்திக்க நேர்ந்தால் அந்நக்ஷத்திரத்தின் உஷ்ணத்தினால் நம் பூமியும், நாமும், இன்னும் நமபூமியிலுள்ள உயிருள்ளனவுமான எல்லாப்பொருள்களும் பஸ்பமாய் இருந்த விடந்தெரியாமல் எரிந்துவிடவேண்டியதுதான்.

ஆதலால் நாம் இரவில் கீழே விழும் நக்ஷத்திரங்களைப்போல் தோன்றும் உருக்கள் "பொறி நக்ஷத்திரங்கள்" என்றும் "எரி நக்ஷத்திரங்கள்" என்றும் சொல்லப்படும் ஒருவித உருக்களேயாம்.

இப்பொறி நக்ஷத்திரங்களும் எரி நக்ஷத்திரங்களும் நம் பூமியிலுள்ள கல், கட்டிகள் போன்ற ரசாயனப் பொருள்களே. அநேகமாய் அவைகளை இரும்புக்கட்டிகள் என்றாலும் பொருந்தும். அவை சில சமயத்தில் நம பூமியை வந்தடைகின்றன. சில சமயங்களில் ஆகாயத்திலேயே பொடியாகிக் காற்றிலேயே மிதந்து கொண்டுமிருக்கின்றன.

"ஆலங்கட்டி மழை"யென்பது என்ன?—வெய்யிற் காலத்தில் சில சமயங்களில் "சடசட" வென்று பனிக்கட்டிகளாகவேயே மழை பெய்கிறது அப்பனிக்கட்டிகள் வெகு வேகத்துடன் வந்து விழுவதால் சில சமயங்களில் உயிர்ச்சேதமும் உண்டாகிறது. அம்மாதிரி மழைக்கே "ஆலங்கட்டி மழை" யென்று பெயர்.

ஆலங்கட்டி மழைக்குக் காரணம என்னவெனில் காற்றில் அதிக நீராவி நிரம்பியிருந்து, வானத்திலும் மேகங்கள் திரண்டிருந்து திடீரெனக் குளிர்ந்த காற்று வீசினால் உடனே நீராவியும் தண்ணீர்த் துளிகளும் பனிக்கட்டியாக மாறி, அக்கட்டிகள் காற்றைவிட அதிக கனமுடையனவாகையால் கீழே விழுகின்றன. அதுவே ஆலங்கட்டி மழையாம்.

சுண்ணாம்புக் கல்லில் தண்ணீரை விட்டால் அது ஏன் பொங்குகிறது?— சுண்ணாம்புக்கல் என்பது "கால்ஸியம்" என்னும் ஓர் உலோகத்தின் பஸ்பம். அதாவது அவ்வுலோகம் பிராணவாயுவினுடன் சேர்ந்திருந்ததனாலுண்டான ஓர் ரஸாயனப்பொருள். ஆகையால் அதில் பிராணவாயுவும் கால்ஸியமுமே சேர்ந்திருக்கின்றன. அச்சுண்ணாம்புக் கல்லின் மேல் தண்ணீரைக் கொட்டினால் ஓர் ரஸாயன மாறுபாடு ஏற்படு

கிறது. அம்மாறு பாட்டினால் சுண்ணாம்புக் கல்லானது தண்ணீரினுடன்கூடி சுண்ணாம்பாகிறது. ஜலத்தில் பிராணவாயுவும் ஜலவாயுவும் இருப்பதாலும், ஜலமும் சுண்ணாம்புக் கலலும் சேர்ந்தே சுண்ணாம்பாகிறதாலும், அச்சுண்ணாம்பில் "கால்ஷியம்," பிராணவாயு, ஜலவாயு, என்னும் மூன்று ரஸாயனப்பொருள்கள் சேர்ந்திருக்கின்றன.

சுண்ணாம்புக்கல் தண்ணீருடன் சேர்ந்து சுண்ணாம்பாக மாறும்போது அதிக உஷ்ணம் உண்டாகிறது. அவ்வுஷ்ணத்தினால் அக்கற்களின்மேல் கொட்டப்படும் தண்ணீரானது உஷ்ணமடைந்து பொங்குகிறது.

"கடல் நோய்" என்பது என்ன?—நாம் நடக்கும் போதாவது, வேறு ஏதாவது காரியங்களைச்செய்யும் பொழுதாவது நம்முடல் ஏதாவது ஓர் புறம் சாய்ந்து நாம்கீழே விழாமல் இருக்கும்படிப் பார்த்துக் கொள்ளுவது நம் காதினுள்ளிருக்கும் ஓர்நுட்பமான பாகமேயாம். அப்பாகம் நம்முள்காதினுள்ளிருக்கும் கால்வாய் போன்ற ஓர் உறுப்பு. அக்கால்வாயினுள் ஒருவித திரவப் பொருள் இருக்கிறது. நம்முடல் எக்காரணம் பற்றியாவது சாதாரண நிலையைவிட்டு இடம் பெயர்ந்தால் இக்கால்வாயின் நிலையும் மாறி அதிலுள்ள திரவப் பொருளும் குலுக்கப்படுகிறது. அக்கால்வாயினுடன் சம்பந்தப்பட்டுள்ள நரம்பு நுனிகள் இதை மூளைக்குத் தெரிவிக்கின்றன. மூளை அதற்கேற்றபடி நம்முடலின் மற்ற உருப்புகளை நடந்து கொள்ளும்படி ஆக்ஞாபிக்கிறது. ஆகையால நம்முடலும் கீழே விழாமல் பாதுகாக்கப்படுகிறது.

சமுத்திரத்தில் கப்பல்கள் போய்க்கொண்டிருக்கும் பொழுது கப்பல் சமுத்திர ஜலத்தின் கொந்தளிப்பினால் சதா ஆடிக்கொண்டேயிருப்பதனால் இக்கால்வாயிலுள்ள திரவப்பொருளும் அடிக்கடி அதனால் நம் மூளையைக் கலக்கிவிடுகிறது. ஆதலால் பித்த நீர் அதிகரித்து நமக்கு வயிற்றுவலியுண்டாகி, வாயிலும் எடுக்கிறோம். இதைத்தான் 'கடல் நோய்'' என்கின்றனர்.

மலைகளின்மேல் ஏன் குளிர்ச்சியாயிருக்கிறது?—நம் பூமியின் உள்பாகம் இன்னும் கொதித்துக் கொண்டேயிருப்பதனால் நம் பூமிக்கு ஓர் சுயவுஷ்ணம் உண்டென்றாலும் நாம் வசித்து வரும் பாகமாகிய அதன்மேல் பாகத்தின் உஷ்ணமெல்லாம் பெரும்பாலும் சூரியனிடத்திலிருந்தே வருகிறது. இவ்வுஷ்ணமானது பூமியைவிட்டு எளிதில் நீங்காமற்படி நம் பூமியைச் சுற்றிலுமோர் போர்வைபோல் சூழ்ந்து கொண்டிருக்கும் காற்றானது பார்த்துக் கொண்டிருக்கிறது.

மலையின் மேல் ஏறிப்போகையில் நாம் பூமியின் உஷ்ணபாகத்திருந்தும், காற்றின் கனமுள்ள அடிப்பாகத்திலிருந்தும், விலகிக்கொண்டே போகிறோமாதலால், சமுத்திரமட்டத்திலிருப்பதைவிட போகப் போக குளிர்ச்சி அதிகரிப்பதைக் காண்கிறோம்.

எலும்புகளினால் என்ன பிரயோஜனம்?—நம முடலிலுள்ள எலும்புக் கூட்டினால் நமக்கு மூன்றுவித பிரயோஜனங்கள் ஏற்படுகின்றன. முதன் முதலில் நாம் நேராக நிற்பதும், நடப்பதும், உட்காருவதும், எலும்புகள் இருத்தலால் தான் இயலுகிறது. அவையில்லாவிடில் சதையும் வளைய உறுப்புகளும் துணி மூட்டையைப் போல் பொத்தெனக் கீழே விழுந்துவிடும.

நம்முடலில், நாம் நினைத்த காரியங்களைச் செய்யக்காரணமாயுள்ள தசைகள் என்னும் பாகங்கள் எலும்புகள் இல்லாவிடில் வேலை செய்ய முடியாது. அவைகள் வேலை செய்வதற்கு ஊத்த முட்டுக் குச்சிகளைப் போலுதவும் சில உறுப்புகள் இருத்தல் அவசியம். அம்மாதிரி உருப்புகளுடன் சேர்ந்திருந்தால்தான் அத்தசைகள் குறுகிக் கொள்ளுவதும் இயலும். தசைகட்கு அத்தகைய உறுப்புகளாக உதவுவது எலும்புகளே.

நம்முடலில் ஓடிக்கொண்டிருக்கும் இரத்தமானது "சிகப்பு தட்டைகள்" என்னும் ஒருவித வஸ்துவினால் ஆக்கப்பட்டிருக்கிறதென்று ஏற்கனவேயே அறிந்திருக்கிறோம். அத்தட்டைகள் இவ்வெலும்புகளுக்குள்ளேயே செய்யப்படுகின்றன.

ஆதலால் பல வழிகளில் நம்முடலிலிருக்கும் எலும்புக்கூடானது நமக்கு இன்றியமையாததாயிருக்கிறது.



# புஸ்தக விமர்சம்



## புஸ்தக விமர்சம்.

(அகஸ்தியதாஸன் எழுதியது.)

### பண்டை நாகரிகம்.

என் குருநாதர் நவீனமாய் "வடமொழியினும் தமிழ்தொன்மையுடையது; தமிழாது நாகரிகம் வேறு; வடமொழியாளரின் நாகரீகம் வேறு; பண்டைத் தனித தமிழரின் பெருமைகளை உணர்ந்து அவற்றை மீண்டும் வட மொழியாட்சியினின்றும பிரித்தல்வேண்டும்" என்னும் கொள்கைகளை வெளியிடும் நூல்களைச் சமீபத்தில் வாசித்துவந்தார். இன்று அவைகளைப்பற்றிய பேச்சு எழுந்தது. அப்போது என் குருநாதர் என்னை நோக்கி; "தம்பீ! மிகப் பழைய பாடல்களாலே தொகுக்கப்பட்ட புறநானூற்றுப் பாடல்களைச் சற்று கவனிப்பாய்; இதோ,

பாஅல் புளிப்பினும்
பகலிருளினும
நாஅல் வேதநெறி திரியினும்"

என்று முரிஞ்சியூர் முடிநாகராயர் கூறியுள்ளார். நால்வேத நெறிதிரியாது என்பதன்றோ இம்முதற சங்கத்துப் புலவரின கொளகையும்.

மானுடன் மூன்று கடன்களோடு பிறக்கமுன என்றும் அவை முறையே தேவர், பிதாஇருடிகள் இவர்களுக்குச் சேரவேண்டியன என்றும உள்ள கொள்கையைத் தனிததமிழ்நாகரிகத்தைக் கண்டுணர்ந்ததாகச் சொல்லிக்கொள்ளும் இக்காலத்துச் சிலர் கூறுவர். அவர்கள் பெட்டிமையார் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய பாடலை அறியார்போலும்.

ஆவும் ஆனியற்பார்ப்பன
மாக்களும்
பெண்டிரும பிணியுடையீரும்
பேணித்
தென்புல வாழ்நர்க்கு
அருங்கடன இறுக்கும்
பொன்போற் புதவர்ப்பெறா
அதீரும்.

என்று கூறுவர் இப்புலவர். பார்ப்பனரைப பசுவை யொத்த இயற்கையை உடையவர்கள என்று இவர் குறிப்பதையும் கவனிப்பாய், தம்பீ: இப்பாடலின் உரையிலே "பாதுகாத்தற்குரிய தென்திசைக் கண்வாழ்வோராகிய நுங்குடியில் இறந்தோர்க்குச் செய்தற்கரிய பிண்டோதகக்கிரியை பண்ணும் பொன்போலும் பிள்ளைகளைப் பெறாதீரும்' என்று உள்ளதைப்பார். எனவே இந்த முக்கடன் கொள்கை தமிழ் நாட்டிலும் தொன்று தொட்டு உள்ளதே பிதாருக்கு தருப்பை மேல் பிண்டம இடுதலும் பண்டைத் தமிழருக்குள்ள வழக்கமேயாம். வேள் எவ்வியிறந்ததை வெள்ளெருக்கிலையார் பாடும்போது

தன் அவர்காதலி புல்மேல்
இன் சிறு பிண்டம் யாங்கு
உண்டனன்கொல்

என்று பலரோடு உண்ட எவ்வி எவ்வாறு பிதாராய் இச்சிறு பிண்டத்தினை உண்கிறான என்று வருந்துகிறார்.



சென்னை ரிப்பன் கட்டடத்தில் ஸங்கீத மகாநாட்டை திருவாங்கூர் இளைய மகாராணியார் திறந்து வைத்தபோது எடுத்தபடம். P.P.B.

தம்பீ! இவர்கள் இந்திரனை ஒரு நிலத்துக்குரிய தெய்வம் என்றும் வடமொழி இந்திரன்வேறு என்றும் கூறுவர்; ஆயினும் தமிழர்களும் இந்திரனை மேலுலகத்துக்கு அதிபதியாகவேகருதினர்என்பது முடமோசியார் அண்டிரன் இறந்தபோது பாடிய பாடலினின்றும் தெளிவாகின்றது அன்றோ?

அண்டிரன் வரூஉம் என்ன, ஒண்
டொடி வச்சிரத்தடக்கை
நெடியோன் கோயிலுட் போர்ப்
புறு முரசங் கறங்க
ஆர்ப்பு எழுந்தன்றால் விசும்பி
னானே.

அதாவது, ஆய் அண்டிரன் வருகிறான் என்று ஒள்ளிய தொடியினையும் வச்சிராயுதத்தையுமுடைய விசாலமாகிய கையையுடைய இந்திரனது கோயிலுள்ளே போர்த்தலுற்ற முரசு முழங்க வர்னத்தனகண் ஓசை தோன்றிற்று.

தலையாலங்கானம் என்னும் போர்க்களத்திலே வெற்றிபெற்ற நெடுஞ் செழியன் என்னும் பாண்டியனைப்பாடிய புலவருள் ஒருவர்,

ஆன்ற கேள்வி அடங்கிய கொள்
கை நான் மறை முதல்வர்
சுற்றமாக மன்னர் ஏவல்செய்ய
மன்னிய வேள்வி முற்றிய
வாய்வாள் வேந்தே.

என்று அம்மன்னன் யாகங்கள் செய்ததைக் குறிப்பிடுகிறார். இந்த அடிகளைத் தொல்காப்பியவுரையிலே இளம் பூரணரும் "பார்ப்பார் வேட்பித்தவாறும் அரசன் வேட்டவாறும் கண்டு கொள்க" என்று எடுத்துக் காட்டியுள்ளார்.

இவ்வாறே, தம்பீ, வேறு புறப்பாடல்களிலும் பார்ப்பனர் சிறப்பிக்கப்பட்டுள்ளனர்

இறைஞ்சுக, பெரும, நின்சென்னி, சிறந்த நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே.

என்றும்

காரி நின்னாட்டு அழல் புறந்தரூஉம் அந்தணரதுவே.

என்றும

ஏற்ற பார்ப்பார்க்கு ஈரங்கை
நிறையப் பூவும் பொன்னும
புனல்படச் சொரிந்து

என்றும்

கேள்வி முற்றிய வேள்வி அந்த
ணர்க்கு அருங்கலம் நீரொடு
சிதறி

என்றும்

அறுதொழில் அந்தணர் அறம்
புரிந்து எடுத்த தீயொடு விள
ங்கு நாடன்

என்றும் வருவனவற்றை நீ அறிவாயே.

பார்ப்பனருக்கு வேதங் கேட்டல், கேட்பித்தல், யாகம் வேட்டல், வேட்பித்தல், ஈதல், தானம் பெறுதல் ஆகிய ஆறு தொழில்களுமுண்டு என்பதையும் இப்பாடல்கள் விளக்குகின்றன.

கபிலர் தாம் அந்தணராதலின் கொடுக்கவும் உரிமையுண்டு என்பதனைக் குறிப்பால விச்சிக்கோனுக்கு உணர்த்தி அவனைப் பாரியின் மகளிரை மணந்து கொள்ளுமாறு பாடிய பாடலிலே 'யானே பரிசிலன் மன்னும் அந்தணன்' என்றனர். 'யானே பரிசிலன்' என்றதனால் நினக்கு என்குறை முடிக்க வேண்டும என்பதும் 'அந்தணன்' என்றதனால் யான் கருதற்கு உரியேன் என்பதும் விளங்குகின்றது. இப்பாடலின் உரையிலே உளளது இக்கருத்தினை.

"நினக்குயான் கொடுப்பக்
கொள்"

என்றுபாட்டிலே உளளதுவே நன்கு வெளிப் படுத்துகின்றதன்றோ?

பார்ப்பான் வேட்பித்தலோடு வேட்டலும் தானம் பெறுதலோடு வழங்குதலும் உண்டு என்பதனை வேறொரு புறப்பாட்டும் குறிக்கின்றது.

நீர் நாணநெய் வழங்கியும்
எண்நாணப் பலவேட்டும்
மண் நாணப்புகழ் பரப்பினன்
கௌண்டின்ய கோத்திரதது
விண்ணந்தாயன என்னும் சோணாட்டுப் பார்ப்பான்.

எனவே, யாகஞ்செய்தல் வேதங் கேட்டல் முதலியன தேசத்து ஆரியர்களின் செய்கைகள் என்றும் ஆதித் தமிழ்மக்களின் நாகரீகம் வேறு என்றும் கூறுவது இயலுமோ? ஆதி காலத்தொட்டே தமிழரும் வட நாட்டாரும் ஒரு பெருநாட்டாராய் ஒரே நாகரிக முடையவராய் ஜாதி மதம் முதலியவற்றுள ஒரே வகையான பாகுபாடுகளை உடையவர்களாய் இருந்தனர் என்பதே உண்மை. பாஷையாலே ஆரியர் வேறு; தமிழர் வேறு எனினும், ஜாதி மதம் முதலியவற்றால் வேறு பட்டவர்கள் அல்லர். பாஷையிலும் வடமொழி தென் மொழிகளுக்குள்ள நெருங்கிய பொருத்தத்தை உனக்கு ஸாவகாசமாய் எடுத்துரைப்பேன்." என்று இவ்வாறு என்குருநாதர் கூறிமுடிக்கும்போது ஞாயிறு மேற்றிசையை அடைந்தனன். ஞாயிற்றைப் போற்றுவதிலும் ஆரிய திராவிடக் கொள்கைகளின் ஒற்றுமையே எனக்கு விளங்கிற்று.




## நவநாகரீகக் குறிப்புகள்.

(காசினி எழுதியது.)

### பஞ்ஜாப் சடா.

***நம் தேசத்து ஸ்திரீகள் நவநாகரீக மாறுதல்களில் ஏற்பட்ட மற்றைய வழக்கங்களைக் கைப்பற்றிய போதிலும், வெகு நாட்கள் வரையில் காலில ஜோடு முதலியவைகளைப்போட்டுக் கொள்ள சங்கோஜப் பட்டார்கள். நம் பாட்டிமார் நாள்களில் தான் காப்பு, கொலுசு, பாதசரம், என்று கனக்கக் கனக்க வெள்ளி நகைகளைக் காலில் போட்டுக் கொண்டார்கள். பிறகு இவைகள் அநாகரீகமாக எண்ணப்படவே, காலில் ஒன்றுமே போட்டுக் கொள்ளாமல் இருந்தார்கள். சமீபத்தில்



பம்பாயில் பல வர்ணங்களில் அநேக விதமான சித்திர வேலைகள் செய்யப்பட்ட வங்காளி ஸாரிகளும் சட்டைகளும் செய்யப்படுகின்றன. G.S.A.

தான் நம் ஸ்திரீகள் சகஜமாக ஷூக்கள் செருப்புகள் முதலியவைகளைக் காலில் போட்டுக் கொள்ளத் துவக்கியுள்ளார்கள். மேல் நாடுகளில்செய்த ஷூக்கள் குமிழ் பூட்ஸுகள் முதலியவைகளைப் போட்டுக் கொண்டிருந்தார்கள். இப்பொழுது, நவநாகரீகத்தில் முன்னேற்றம் அடைந்தவர்கள், சுதேசிச்சரக்குகளையே உபயோகிக்க வேண்டுமென்ற எண்ணததினால் தூண்டப்பட்டு பஞ்சாப் சடாக்களைப் போட்டுக் கொள்ளுகிறார்கள். இவைகள் பட்டுகளில சரிகைப் பூக்கள் போட்டுச் செய்யப்பட்டிருக்கின்றன. சடா போட்டுக் கொண்டால் மேல் ஜோடுகள் போட்டுக் கொள்ளுவது வழக்கம் இல்லை. இவைகள் அநேக நிறங்களில் விற்கப்படுகின்றன. விலையும் அதிகம்இல்லை. சாதாரணமாக ஒரு ஜதை சடாவின் விலை மூன்று ரூபாய்களுக்கு மேலில்லை. அதிக சரிகை போட்ட சடாக்களின் விலை இன்னும் அதிகமாக இருக்கலாம். லேடி சுந்தராசாரி வெல்வெட்டில் தைத்த சடாஜதை பதினைந்து ரூபாய்கள் என்று வாங்கினாள். ஆனால் சகஜமான விலை மூன்று ரூபாய்க்குள்தான் இருக்கிறது. சடாக்களில் தினுசுவாரியாக ஐந்தாறு நிறத்தில் ஐந்தாறு ஜதைகளை வாங்கி, புடவையின் நிறத்திற்கு ஏற்ற மாதிரியில் போட்டுக் கொள்ளுவது தான் நாசூக்கு. அன்று ஒரு



பம்பாய் உயர்குடும்ப ஸ்திரீகள் அணியும் ஸ்வதேசிச் செருப்புகளும் ஜோடுகளும். இவைகள் அநேக வர்ணங்களில் அழகாகவும் மிருதுவாகவும் செய்யப்பட்டிருக்கின்றன. சரிகை வேலைசெய்த ஸ்வதேசி ஜோடுகளைப் படத்தில் காணலாம். G.S.A.

ஸ்திரீகள் கூட்டத்திற்கு ஒருத்தி வந்திருந்தாள். மெல்லிய பச்சைப் பட்டுப் புடவை உடுத்தி இருந்தாள். அடியில் நான்கு விரல் அகலத்திற்கு கொடி மாதிரியில் சரிகை போட்டிருந்தது. புடவையின் நிறம் மாகதப் பச்சை வெள்ளைப்பட்டு ஜாகட் போட்டிருந்தாள். ஜாகட் கை ஓரத்தில பச்சைப்பட்டு நூலினால் வங்கி மாதிரியில் பூவேலை செய்திருந்தது. காலில் பஞ்சாப் சடாக்கள் போட்டிருந்தாள் அது கரும் பச்சைப் பட்டில் சரிகை பூக்கள் போட்டுச் செய்திருந்தது. அவள் செய்திருந்த சிங்காரம் அவளுக்குப் பொருந்தி இருந்தது! பார்வைக்கு எவ்வளவோ அழகாக இருந்தது. இப்பொழுது அநேகமாக எல்லோர் கால்களிலும் இந்தச் சடாக்களைக் காணலாம். இவைகள் போட்டுக்கொண்டு நடப்பதற்கும் சௌகரியமாக இருக்கின்றன. இவைகள் திருவல்லிக்கேணியிலும், மூர் மார்க்கெட்டிலும், இன்னும் பட்டணத்தில் சில இடங்களிலும் விற்கப்படுகின்றன. மிதி அடிகளில் சடாக்கள் தான் தற்காலத்திய மோசு என்று கூறலாம்.

### சுதேசிமிதி அடிகள்.

இன்னும் சில மிதி அடிகளும் உள இவைகள் சுதேசித் தோல்களில் தைக்கப்பட்டவைகள். சடாக்களுக்குக் குமிழ்கள் கிடையாது. செருப்பு மாதிரியில் அடி தட்டையாகவே இருக்கும். ஆகையால், உயரமாகக் காணவோ, அல்லது குமிழ் உள்ள மிதி அடிகளைப் போட்டுக்கொள்ளவோ விருப்புபவர்கள் இந்த சுதேசி ஷூக்களைவாங்கிப் போட்டுக்கொள்ளுகிறார்கள். இவைகள் அநேகம் தினுசுகளில் தைக்கப்படுகின்றன. தோலும் மெதுவாகத் தான் இருக்கிறது. இவைகள் குமிழ் வைத்தும், இல்லாமலும் விற்கப்படுகின்றன. எத்தனையோ மாதிரிகள்; இஷ்டப்பட்ட தினுசுகளை வாங்கிப் போட்டுக்கொள்ள வேண்டியதுதான். இதில் எல்லாம் அவர் அவர்கள் இஷ்டம்தான் பிரதானம். மொத்தத்தில், சடாக்களோ, அல்லது ஷூக்களோ, அவைகள் நம்தேசத்து வேலைப்பாடாக இருப்பது தான் இப்பொழுது உயர்த்தியாகவும், நாசூக்காகவும் கருதப்படுகிறது. ஆனால், உனக்கு இதை எல்லாம் பற்றி எழுதுவதில் என்ன பிரயோஜனம்? நான் உனக்கு ஒரு சடாவாங்க உத்தேசித்தேன் ஒருவித மங்கலான சிகப்பில் சரிகைப் பூக்கள் போட்டுப் பார்வைக்கு மிகவும் அழகாக இருந்தது. அப்புறம் நான் போன வருஷம் வாங்கி அனுப்பின 'அடையார்' செருப்புக்களையே நீ உபயோகிக்காமல உள்ளே வைத்துப் பூஜை பண்ணுவது நினைவு வரவே 'வாங்காமல் விட்டு விட்டேன். செருப்புப் போட்டுக் கொண்டால் கிராமத்தில் எல்லாரும் பரிகாசம்செய்கிறார்கள்; எனக்கு சங்கோசமாக இருக்கிறது என்று நீ சொல்லுகிறாய். ஆனால், நீயும், உங்கள் பக்கத்தாத்து மாட்டுப் பெண்ணுமாக ஒரு ஸ்திரீகள் சங்கம் ஏற்படுத்தி, வாரம் ஒருமுறை அந்தச் சங்கத்தில் கூடி, ஊர் ஸ்திரீகள் எல்லாரும் பொதுவிஷயங்களைப் பற்றிப் பேசியும், ஏதாவது புராணங்களை வாசித்தும் பொழுது போக்குவதாக நீ எழுதி இருந்தாயே? அது மட்டும் கிராம வாழ்க்கைக்கு ஒக்குமா? நீயும் உங்கள் பக்கத்தாதது மாட்டுப் பெண்ணும், பதது நாள்களுக்குப் பிறர் பாிகாசம செய்வதைக் கவனிக்காமல் வெளியில் செல்லும் பொழுது மிதி அடியைப் போட்டுக் கொள்ளுங்கள். அப்புறம், மற்றவர்களும் பரிகாசம் செய்வதை விட்டுவிட்டுத தாங்களும் மிதி அடிகளைப் போட்டுக் கொள்ளத் தலைப்பட்டு விடுவார்கள். இதுதான் மனித சுபாவம்; வேண்டுமானால் எழுது. சடாக்களை வாங்கி அனுப்புகிறேன்.

---

# ரேகை சாஸ்திரம்.

(சக்திதாஸன் எழுதியது)

[காப்பிரைட்]

1 இளமைப் பருவம்
தேகதத்துவம் முதலியன.

அபூர்வப் பிறவி—(அதாவது ஒழுக்கந் தவறிய விடத்துதித்தது) விதிரேகை சிக்கலாகவும் உற்பத்தியில் தீவும் காணப்படும். ஆயுள் ரேகையிலும் உற்பத்தியில் தீவுடனிருக்கும்.

ஆயுள் ரேகை உற்பத்தியில் மட்டும் தீவிருந்தால் பரம்பரையாய்த் தொடர்ந்து வரும் நோயைத் தெரிவிக்கும்.

விதி ரேகை கயிற்றைப்போல் பின்னலாகவும், உற்பத்தியில் குறுக்கு மறுக்காகவும் சூலம் போன்றுமிருக்குமாயில் இளமையில் துரதிர்ஷ்டத்தையும் அசௌகரியத்தையும குறிக்கும்.

ஆயுள் ரேகையின் உற்பத்தியிலேயே சூலமிருந்தால் இளமையிலுண்டாகும் இடையூறைக் குறிக்கும். அதனோடு ஒரு புள்ளியுமிருந்தால் ஆபத்தை ஊர்ஜிதப்படுத்துவதாகும்.

ஆயுள் ரேகை சங்கிலிபோல் குருமேட்டுக்குக் கீழே காணப்படில் பால்யத்திலுள்ள பலஹீனத்தை அறிவிக்கும்.

சரீர தத்துவங்கள் மெலிவடைந்திருக்கிறதை அறிவிக்கும். இதர குறிகள்:— நீண்டு மெலிய நகங்கள்; ஆயுள் ரேகை அகண்டு பங்கலாய்த் தோன்றுதல்; சங்கிலியாக, ஆயுள் ரேகை கிளைகளுடன் தோன்றுதல்; அகண்டு மங்கலாய்த் தோன்றும் இருதய ரேகை பட்டும் படாமல் காணப்படும் ஆரோக்கியரேகையும் புத்தி ரேகையும்.

அகால மரணத்தைக் குறிக்கக் கூடியவைகள் :—இருதய ரேகை சனி மேட்டில் உற்பத்தியாகி, புத்தி ரேகையின் மத்தியில் தோன்றும் சூலம். இருதய ரேகை திருகலாக, புதன் மேட்டுக்கருகில் புத்திரேகையோடு வளைந்துசம்பந்தப்படுதல். புத்தி ரேகை விதிரேகை குறுக்கிடுமுன் நின்று விடுதல்.

மூன்று கங்கண ரேகைகள் யாதொரு சிக்கல் பின்னல் இல்லாமல் தோன்றியிருக்குமானால் நல்ல தேகாரோக்கியத்தைக் குறிப்பதாகும். நீண்ட ஆயுள் ரேகை சுக்கிரமேட்டை நன்கு வளைந்திருத்தல். இருதய புத்தி ரேகைகள் செங்குத்தாயும் நீளமாயுமிருத்தல். செவ்வாய் ரேகை இரண்டு கைகளிலுமிருத்தல். (இது ஆயுள் ரேகைக்குப் பக்கமாய் சுக்கிரமேட்டில் தோன்றும்) இவைகளும் திடகாத்திரத்தைக் குறிப்பதாகும்.

ஆரோக்கிய ரேகை இல்லாமலும் உள்ளங்கையில் தோன்றும் அமையும் முக்கோணத்தில் ஒரு கோணமாவது செம்மையாயிருந்தால் சாதாரணமாக நல்ல ஆரோக்கியத்தன்மையைக் குறிப்பதாகும்.

ஆரோக்கிய ரேகை நீளமாய் புதன் மேடு வரை சென்று, மூன்றுவது கோணம் அகண்டு நன்கமைந்திருந்தால் தீர்க்காயுளைக் குறிப்பதாகும்.

ஆயுள் ரேகை துண்டு பட்டும் ஏணிபோல் சிக்கலாயிருந்தால் எப்பொழுதும் நோயாளியாயிருப்பதைக் குறிக்கும்

அகண்ட ஆரோக்கிய ரேகையின் இறுதியில் இரண்டாகத் துண்டிக்கப்படும், ஆயுள் ரேகையில் குறுக்கிட்ட ரேகைகளும் காணப்படில் ஆபத்துக்கிடமான நோயைக்குறிக்கும்.

நகங்களில் மஞ்சள் நிறமான புள்ளி அல்லது வடு காணப்பட்டு, ஆயுள்ரேகை துண்டு பட்டு முக்கியமாய் கீழ்ப்பாதி சுக்கிரமேட்டை நோக்கி யிருந்தால் சமீபத்தில் மரணத்தைக் குறிக்கும்.

ஆயுள்ரேகை மிக மெல்லிதாகவும, மத்தியில் பட்டும் படாமல் மங்கலாயிருந்து, ஒருபுள்ளியோடு ரேகை நின்றிருக்குமாயின் திடும் சம்பவமான ஆபத்தைக் குறிக்கும். இன்னும், கப்புக்கிளையின்றி இருதய ரேகை சனிமேட்டிலிருந்து உற்பத்தியாவதும், ஆயுள்ரேகை சில சிறு ரேகைகளோடு நின்று விடுவதும், புத்திரேகை வளைந்து கங்கண ரேகைக்கு நெருங்கி, இறுதியில் நக்ஷத்திரக்குறி அல்லது சூலம் (கராஸ்) காணப்படுவதும் திடீரென உண்டாகும் மரணத்தைக்குறிக்கும்.

உற்பத்தியில்ஆயுள்,புத்திஇருதயம ஒன்று பட்டும் செவ்வாய் மேட்டில் குறுக்கு மறுக்கான ரேகைக்கூட்டம் காணப்பட்டும், விதிரேகையின் இறுதியில்சூலம் போன்ற குறுக்கிட்ட தன்மையுமிருந்தால் துர்மரணத்தைக் குறிக்கும்.

கங்கண ரேகையிலிருந்து ஒரு பயண ரேகை உற்பத்தியாகி மேல் நோக்கிஆயுள் ரேகையோடு சம்பந்தப்படுமாயின் பிரயாணத்தில் ஆயுள் முடிவைக குறிக்கும்.

செவ்வாய் மேட்டில் வட்ட வளையமான ரேகையும் சந்திர மேட்டில தோன்றும் வட்ட வளைய ரேகையும், புத்திரேகை சந்திரமேட்டில் தொங்கி இறுதியில் நக்ஷத்திரக் குறியும் இவைகள் ஜலத்தில் ஆயுள்முடிவு என்பதைக் குறிக்கும்.

செவ்வாய் மேட்டின் மேற்பகுதியில் நக்ஷத்திரக் குறியும், செவ்வாய் மேட்டிலிருந்து ஒரு ரேகை கோணலாய் சனி மேட்டுக்குச் செல்வதுமான இவ்விரண்டும் யுத்தகளத்தில் மரணமென்பதை அறிவிக்கும்.

புதன் மேட்டில்குறுக்குமருக்கான ரேகைக் கூட்டம் காணப்படில் திருட்டு அல்லது கொள்ளையடிக்குமிடத்தில் மரணமேற்படுமென்பதாகும்.

விதிரேகை முக்கோணத்திலிருந்து உற்பத்தியாகி, இரண்டாவது விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் சென்றிருந்தால் காராக்கிரஹத்தில் மரணமடைவதைக் குறிக்கும்.

விதிரேகை சனி மேட்டுக்கு நேராக வெட்டப்பட்டும் ஆயுள்ரேகையின் இறுதி முக்கோணத்திற்குள் நின்றும் அதில் ஒரு சூலமும், இரண்டாம் விரலின் இரண்டாவது மூன்றுவது அங்குலாஸ்திகளில் ஒரு நக்ஷத்திரக்குறியுமிருந்தால தூக்கு மரத்தடியில் ஆயுள் முடிவைக் குறிக்கும்.

புத்திரேகை வளைந்து அலைபோல் அமைந்து, அதில் ஒரு முக்கோணமும் சூலமும் காணப்படில் விபத்தால் ஆயுள் முடிவை யறிவிக்கும்.

சனிமேட்டுக்குக் கீழே புத்தி ரேகை துண்டு பட்டு, சிவந்த புள்ளியும் காணப்படில் தலையின் மேல் விபத்து ஏற்படுமென்பதைக்குறிக்கும்.

இரண்டாவது விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறியும், சனி மேட்டில் உற்பத்தியான ஒரு ரேகை சுக்ர வளையத்தில் குறுக்கிட்டுமிருந்தால் கத்தி குத்தாலான விபத்தைக் குறிக்கும்.

சனி செவ்வாய் மேடுகளில ஒரு நக்ஷத்திரக் குறியுமகாணப்படில் மிருகங்களால் ஏற்படும் அபாயத்தைக் குறிக்கும்.

சுக்கிரமேட்டிலுள்ள ஒரு ரேகை சனி மேட்டுக்குச் சென்றிருந்தால் நான்கு கால் பிராணிகளாலுண்டாகும விபத்தைக் குறிக்கும். அந்த ரேகை கிளைகளிருப்பின் உயிருக்கே ஆபத்தென்பதைக் குறிப்பிக்கும. கீழே புத்திரேகை துண்டுபட்டிருந்தாலும் மேற்சொன்ன பலனைக்குறிக்கும்.

2. நோய்களைக் குறிக்கும்
ரேகைகள்.

இரண்டாவது விரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு கருப்பு புள்ளி குளிர்ஜ்வரத்தைக் குறிக்கும்.

செவ்வாய் ரேகை இரண்டு கைகளிலும் கப்புகிளைகளோடு சந்திரமேட்டை நோக்கியிருந்தாலும், ஆயுள் ரேகையின் கிளையொன்று சந்திரமேட்டுக்குச்சென்று ஒரு நக்ஷத்திரக் குறியோடு முடியுமானால் மதுவுண்டதினால் ஏற்பட்ட கோளாறுகளைக் குறிக்கும்.

இருதய ரேகையின் மத்தியில் ஆழமான தழும்பு காணப்பட்டாலும், ஆரோக்கிய ரேகை புத்தி ரேகையில் குறுக்கிடும்போது செந்நிறமாயிருந்தாலும் ஜன்னி உண்டாகும் என்பதைக் குறிக்கும்.

இருதய ரேகையிலிருந்து இரட்டைக்கிளை சந்திர மேட்டை நோக்கிச் சென்றால் ஜன்னியால் ஆயுள் முடிவைக் குறிக்கும்.

இருதய ரேகை புத்திரேகையோடு இணங்கியிருந்தால்சுவாசகாச நோயைக் குறிப்பதாகும்.

கையில் எப்பொழுதும் ஈரமிருந்தாலும், ஆரோக்கிய ரேகை அலைபோல் அமைந்திருந்தாலும் அதிகரித்த பித்த நோயை அறிவிக்கும்.

வட்டரேகை அல்லது வட்டமான புள்ளி ஆயுள் ரேகையில் இருந்தாலும் புத்தி ரேகையின வட்டவடிவான ரேகையும் ஆரோக்கிய ரேகையில் சூலமும் காணப்படில் அந்தகன் என்பதைக் காட்டும். இன்னும் ஆரோக்கிய ரேகைக்கருகில் ஒரு நக்ஷத்திரக் குறியும், சூரிய ரேகை இருதய ரேகையோடு சந்திக்கும் போது ஒரு கருப்புப்புள்ளியிருந்தாலும் மேற்சொன்ன பலனுண்டாம்.

புத்தி ரேகை பங்கலாய் அகண்டு கருப்புப்புள்ளிகளோடு ஆயுள் ரேகை உற்பத்தியில கப்புக் கிளையுமாயிருந்தால புத்திமாறாட்ட முண்டாகும் என்பதாகும்.

சுக்கிரமேட்டிலிருந்து ஒரு ரேகை புத்திரேகையில் நின்று விட்டாலும், புத்திரேகை அலைபோலும் சென்று ஆரோக்கிய ரேகையைத் தொடுமானாலும விதிரேகை புத்திரேகையோடு நின்று விட்டாலும், புத்திரேகை ஆரோக்கிய ரேகையோடு ஒன்றுபட்டிருந்தாலும், ஆயுள ரேகை அநேக கிளைகளோடு உற்பத்தியானாலும், புத்திரேகையின் கிளை ஆயுள்ரேகையைக் குறுக்கிட்டு வெட்டியும் புதன் மேடு உப்பலாயிருந்தாலும, இவைகளெல்லாம் மூளைத் தொந்திரவைக் குறிப்பிடுவதாகும்.

நமது தொடர் கதை

# சந்திரசேகரன்.

## ஓர் இனிய துப்பறியும் நாவல்

(ஸ்ரீமான் எம். என். கணேசய்யர் எழுதியது.)

(சென்ற வாரத் தொடர்ச்சி)

[வெளியான பாகங்களின் சுருக்கம்:-ஜம்புலிங்கத்தால ஏவப்பட்டுக் குலசேகரன் வீட்டில் கைப்பெட்டியைக் களவாடச் சென்ற சந்திரசேகரன் குலசேகரன் கொலையுண்டிருப்பதைக் கண்டு தப்பியோடி போலீஸாரை ஏமாற்றி குலசேகரன்குமாரி குமுதவல்லிக்குத்தான் குற்றவாளியல்லவென்று நம்பிக்கை உண்டாக்கி நிஜமான குற்றவாளியைக் கண்டுபிடிக்க இருவருமாக ஜம்புலிங்கத்தின் வீட்டில புகுந்து அவனைக் கைத்துப்பாக்கியால் பயமுறுத்தி விஷயங்களைக் கேட்கிறார்கள்.]

குமுதவல்லி:—எனது தந்தையைக் கொலை செய்தது நீரென்று நான் சொல்லவரவில்லை. கூறுமிடத்து அவரைக் கொன்றது நீரல்லவென்பதுதான் என் அபிப்பிராயம். அக்கொலையைப்பற்றிய ஸங்கதிகள் உங்களுக்குத் தெரிந்தே இருக்கவேண்டுமென்றும் நான நினைக்க இடமில்லை. நேரிட்டிருக்கும் கொலைக்கும், சந்திரசேகரனை ஒரு கைப்பெட்டியைக்களவாடிவரும்படி அனுப்பப்பட்டதற்கும் எதாவது ஸம்பந்தம் இருக்கலாமென்பது என் அபிப்பிராயம். ஆதலால் எதற்காக நீங்கள் சந்திரசேகரனை அன்றிரவு எங்கள் வீட்டிற்கனுப்பினீர்? எனது தந்தையைக் கொன்றவனைக் கண்டுபிடித்துச் சிக்ஷைக்குக் கொண்டுவரத் தீர்மானித்திருக்கும் எனக்கு அவ்விஷயம் தெரியவேண்டியது அவசியம். ஆதலால லகுவில நீர் சொல்லாவிடில் நிர்ப்பந்தத்தின்மேல் சொல்ல வேண்டிவரும்!

ஜம்புலிங்கம்:—நிர்ப்பந்தமா! என்னை நிர்ப்பந்தப்படுத்திப் பேசச் செய்வதெனுல் அதற்குச் சக்தி வேண்டுமே யம்மே!

குமுதவல்லி:— அச்சக்தி எனக்கிருக்கிறது. சந்திரசேகரா! அக்கைத் துப்பாக்கியை இப்படிக்கொடு!

சந்திரசேகரன் கொடுத்த கைத்துப்பாக்கியைக் கையில் வாங்கிக்கொண்டு ஜம்புலிங்கத்தைப் பார்த்துக் குமுதவல்லி, "இதோ இருக்கிறது எனது சக்தி! நீர் வாய்திறந்து விஷயங்களைக் கூறுவிடில் சுட்டுக் கொன்றுவிடுவேன். உமது வேலைக்காரன் உதவிக்கு வரக்கூடுமென்ற எண்ணம் முற்றிலுமே வேண்டாம்! அவன அடுத்த அறையில் கட்டுண்டு கிடக்கிறான். நாங்கள் உம்மைச் சுட்டுவிட்டு இங்கிருந்தகன்றால் யாருக்கு என்ன தெரியக்கூடும்? யோஜனைசெய்து வேண்டுமானல் நீர் பார்க்கலாம்.

அகத்தினழகு முகத்திலே என்பது தென்னவோ கூறப்பட்டுளது. ஆனல் ஜம்புலிங்கம்தன் எண்ணத்தைக் காட்டக்கூடிய யாதொரு மாறுதல்களையும் அவனது முகத்தில் காட்டவே இல்லையெனலாம். இரண்டொரு நிமிஷங்களுக்கெல்லாம் அவன் குமுதவல்லியை நிமிர்ந்து பார்த்து "ஒருவன் இரண்டாந்தரம் ஏமாறுவான் என்று நினைப்பது முட்டாள்தனம்" என்றான்.

குமுதவல்லி:—நான் இப்பொழுது கூறுவது ஏமாற்றும் பேச்சன்று. நான் கூறுவதை நிறைவேற்றியே தீருவேன் என்பதில் ஸந்தேஹம்கொஞ்சமுமே வேண்டாம். எனது தகப்பனுரோ கொலையுண்டு இறந்திருக்கிறார். அதை நினைக்க நினைக்க என்மனம் கொதிக்கிறது. அவரைக்கொன்ற பாதகனைக் கண்டுபிடித்துச் சிக்ஷைக்குக் கொண்டுவரத் தீர்மானித்துள்ள எனக்கு உம்மைப் போன்ற இரண்டொரு ஆஸாமிகளை வேண்டுமானல் கொன்று காரிய ஸாதகம் செய்து கொள்ளத் தயக்கம் ஏற்படக் காரணமில்லையென்பது ஞாபமிருக்கட்டும்!

ஜம்புலிங்கம் வாய் திறந்து பேசுவதாகக் காணோம்! குமுதவல்லி துப்பாக்கியும் கையுமாக நின்றுகொண்டிருந்தாள். சந்திரசேகரன் அதிக வியப்புடன் இனி நடக்கப்போவதை எதிர்பார்த்து நின்றுகொண்டிருந்தான்.

குமுதவல்லி:—அப்படியானல் நீர் வாய்திறந்து பேசப்போவதில்லையாக்கும்! நான் பத்தெண்ணுவதற்குள் பதில்வரப்படாதபக்ஷத்தில உமது மூளை சிதறுண்டுபோவது நிச்சயம்.

ஒன்று, இரண்டு, மூன்று, என்று குமுதவல்லி எண்ணிக்கொண்டே வந்தாள்.

அடடா! எவ்வளவு சோபாக்கள்! தட்டுமுட்டு சாமான்கள்! ஐசுவரியங்கள! இவைகளை யெல்லாமா அனுபவிப்பதை விட்டு இறக்கத் தயாராகப் போகிருன் ஜம்புலிங்கம்!

பத்தென்று சொல்லப் போனாள் குமுதவல்லி. அப்பொழுது ஜம்புலிங்கம், "இரு! தாழ்த்து அந்தக் கைத்துப்பாக்கியை. எனக்குத் தெரிந்திருப்பதை நான் சொல்லிவிடத் தயார்"

குமுதவல்லியும் தூக்கி வைத்துக் கொண்டிருந்த துப்பாக்கியைத் தாழ்த்தி, "ஒரு ரவை உமது மூளையை ஊடுருவிப் பாய்ந்திருக்கும்! தப்பினீர்! இறந்தபின் உமது உபயோகம் ஏற்படுவதைவிட நீர் உயிருடனிருக்கையில் ஏற்படக் கூடிய உபயோகம் சிறந்ததாக விருக்கக் கூடுமென்பது என் அபிப்பிராயம்! ஆதலால் வாய்திறந்து உமக்குத் தெரிந்ததைக் கூறலாம்" என்றாள்

ஜம்புலிங்கத்தின் முகத்தில் ஏற்பட்டிருந்த வியர்வைத் துளிகளிலிருந்து அவன் பயந்து நடுங்கிக்கொண்டிருந்தது ஏற்பட்டது! குமுதவல்லி தன்னைச் சுட்டுக் கொன்றுவிடத் துணிந்தவளே யென்பதில் அவனுக்குக் கொஞ்சமேனும் ஸந்தேகமே ஏற்படவில்லை.

"ஸரி. நிர்ப்பந்தம் செய்யும் பக்ஷத்தில சொல்லிவிட ஆக்ஷேபணை இல்லை! ஆனல் நான் சொல்வதைக் கேட்ட பிறகு ஏன் அப்படி நிர்ப்பந்தப் படுத்திக்கேட்டு விஷயங்களைத் தெரிந்துகொண்டேன் என்று நீயே விசனப்படவேண்டி நேரிடும்" என்றான் ஜம்புலிங்கம்.

குமுதவல்லி:—காலஹரணம் செய்ததுபோதும்! தெரிந்தவைகள் சொல்லப்படலாம்.

ஜம்புலிங்கம் பெருமூச்செறிந்துகொண்டு, "அம்மணி! குமுதவல்லி! ஆரம்பத்திலேயே உனது தந்தை ஒரு பெரிய கன்னக்களவு, வழிப்பறி, திருட்டு முதலியவைகளில் கைதேர்ந்த பெயர்வழி என்றதைத் தெரிந்துகொள்" என்றான்.

ஜம்புலிங்கம் கூறியதைக் கேட்ட குமுதவல்லி ஸ்தம்பித்து இரண்டொரு நிமிஷம் நின்றுவிட்டாள். பிறகு அவனைப் பார்த்து, "நீர் கூறுவது சுத்தப்பொய்; அபாண்டமான அஸத்தியம்" என்றாள்.

"நான் முன்னமேயே கூறவில்லையா? குப்பையைக்கிளறவேண்டாம், கிளரவேண்டாம் என்றேனேயன்றோ!" என்றான் ஜம்புலிங்கம்.

"இன்னொரு பொய் உமது வாயினின்றும் வெளிப்பட்டதேயாகில நீர் தொலைந்தீர்" என்றாள் குமுதவல்லி.

ஜம்புலிங்கம்:—உனது பிதிர்வாஞ்சைக்கு மெச்சுகிறேன். எனக்கும் உன்னைப்போன்ற ஒரு பெண் இருந்தால் நீ செய்துள்ளவாறே அவள் செய்வது எனக்குப் பிரியத்தை உண்டாக்கும் நிச்சயம். அதிருக்கட்டும். நான் கூறியதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நீங்களெல்லாம் நம்பும்படி நான் நிரூபிக்க முடியும்!

ஜம்புலிங்கம் கூறியது குமுதவல்லியின் மனதைப் புண்படுத்தியதென்றுணர்ந்த சந்திரசேகரனும் அவனைப் பார்த்து "ஸரி! நீர் இப்பொழுது கூறியதை நிரூபிக்கவேண்டியது! இல்லாவிடில் உமது முதுகுத்தோல் கழன்டு போகும் ஜாக்கிரதை! இப்பெண்மணி உம்மைத் துப்பாக்கியினுல் சுட்டுக் கொல்லுமுன் நான் என் கை லாவகத்தைக் கொஞ்சம் உமது முதுகின்மேல் காட்டப் பிரியப்படுகிறேன்" என்றான்.

ஜம்புலிங்கம்:- அவசரப்படேல்! நான் விரும்புவதெல்லாம் உங்களுக்குதவிபுரிய வேண்டுமென்பதே! உங்களது ஸந்தேகத்தை இதோ ஒரு நொடியில் அகற்றி விடுகிறேன் பாருங்கோள்! சந்திரசேகரா! இந்தா! இதோ நான் கொடுக்கும் சாவியை உபயோகித்து அந்த அலமாரியைத் திறந்து அதில் ஒரு தஸ்தாவேஜுக் கட்டிருக்கக் காண்பதை இங்கு கொண்டுவா! நீங்கள் எனது கச்சேரி அறைக்குள் வருஷம் நூறு தேடியிருந்தாலும் ஒன்றுமே உங்களுக்குக் கிடைத்திராது! எனது ஸகலமுக்கியமானகடிதங்கள் முதலியவை வைக்கப்பட்டிருப்பது இந்த எனது படுக்கை அறையிலேயே! தெரிந்ததா! ஆனல் நான் சொன்னதை மனதில்வைத்துக்கொண்டு இரண்டாவதுதடவை இந்த திருட வர வேண்டாம் அத்தகைய எண்ணமிருந்தால் அதை உடனே அகற்றி விடுவதே நலம்! நாளை முதல் இந்த வீட்டில் நுழைவது இன்று இருந்தது போல் அவ்வளவு சுலுவாக இராது திண்ணம்! எல்லாரையும் நம்பும் சுபாவம் எனது! அதனுல்தான் உங்கள் காரியம் அவ்வளவு எளிதில் கை கூடும்படி நேர்ந்தது! அவ்வளவே!

ஜம்புலிங்கம் கேட்ட தஸ்தாவேஜுக் கட்டைச் சந்திரசேகரன் கொண்டு வந்து கொடுத்தான். அதை அவிழ்த்துத் தேடி ஒரு கடிதத்தை எடுத்து ஜம்புலிங்கம் குமுதவல்லியினிடம் கொடுத்தான். கூறுமிடத்து அது ஒரு கடிதமே அல்ல! ஒரு மனிதனது படமும் அவனைப் பற்றிய விவரமும் ஏற்பட்டிருந்த பழைய ஸமாசாரப் பத்திரிகை ஒன்றின் ஒரு பாகமே அது!

படத்தைப் பார்த்து அதனடியில்விவரிக்கப் பட்டிருந்ததையும் படித்த குமுதவல்லியின் மனம் சஞ்சலமடைந்தது. முகத்தில் ஈ ஆடவில்லையெனலாம்

சந்திரசேகரனுக்கு வந்த கோபத்திற்கோ அளவில்லை. "இந்தப்பாவி ஜம்புலிங்கத்தைச் சித்திரவதை செய்து கொன்றால் தான் என்ன?" என்று தனக்குட் சொல்லிக்கொண்டான்.

திரும்பவும் ஜம்புலிங்கம் குமுதவல்லியை நோக்கி, "அம்மணி அந்தப்படம் யாருடைய தென்று அடையாளம் ஏற்பட்டதோ? வெகு நாட்களுக்கு முன் எடுக்கப்பட்ட புகைப்படத்தின் படம் அது! அப்பொழுது உனது தந்தை வாலிபராக இருந்தார்! ஏழுவருஷம் மோசடியென்ற குற்றத்திற்காகக் கடின காவல் தண்டனை விதிக்கப்பட்ட ஸந்தர்ப்பத்தில் எடுக்கப்பட்ட புகைப்படத்தின் பிரதிதான் இப்பொழுது உனது கையிலிருப்பது!" என்றான்.

என்ன செய்வாள் குமுதவல்லி! தனது அருமைத் தந்தை குற்றத் தண்டனையை அனுபவித்

திருந்ததைக் கேட்டறிந்த அவள் மனம் பதறிற்று!

ஜம்புலிங்கம்:—குலசேகரன் கெட்டிக்காரன் தான்! தந்திரசாலிதான்! ஆயினும் அந்த ஒரு தரம் மாத்திரம் போராத காலத்தினால் அகப்பட்டுக் கொண்டு சிக்ஷையை அடைந்தான். மற்றும் அவன் விடுதலையடைந்த பிறகு எவ்வளவோ சட்டவிருத்தமான குற்றங்களைச் செய்திருந்தாலே! அகப்படாமல் தப்பித்துக் கொண்டிருக்க வில்லையோ! எல்லாம் கிரஹ சாரங்களின் செய்கை!

ஜம்புலிங்கத்தின் ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொரு கூர் அம்புபோல் குமுதவல்லியின் மனதில் தைத்துப் புண்படுத்தியதை அறிந்த சந்திரசேகரன் அவளைப்பார்த்து, "அம்மணி! இந்தப் பயலைச் சுட்டுக்கொன்று விடவா?" என்று கேட்டான். குமுதவல்லி, அவளிடம் கொடுக்கப்பட்ட படத்தைப்பார்க்கையில் அவளிடமிருந்து வாங்கிக் கொண்டிருந்த துப்பாக்கிதான் அவனிடமிருந்ததேயன்றோ!

குமுதவல்லி:—என்ன முட்டாள் பேசும் பேச்சு! உண்மையை ஒருவன் சொன்னால் அதற்காக அவனைச் சுட்டுக்கொல்வதா!

சந்திரசேகரன்:—அந்தப் பயல் கூறியதை நான் சற்றும் நம்பவே இல்லை.

சொல்லற்கரிய துக்கத்துடன் கூடியிருந்தபோதிலும் புன்னகை செய்த வண்ணம் குமுதவல்லி சந்திரசேகரனைப் பார்த்து, "எனக்கும் அவனது பேச்சில் நம்பிக்கை ஏற்படாமலிருந்தால் நல்லது தான்! ஆனால் அதற்கிடமில்லையே! இப்படம் தந்தையின் படமே! சந்தேகமே இல்லை" என்று கூறித் தன்னிடமிருந்த படத்தைச் சந்திரசேகரனிடம் காட்டினாள்.

மேற்கூறியுள்ள படத்தைக் கையிலும் வாங்கிப்பார்த்தான் சந்திரசேகரன். பின்னர் அதைப் பற்றிக் கூறப்பட்டிருந்த விவரங்களையும் படித்துப் பார்த்தான்.

சந்தேஹிக்கவே இடமில்லை. வாலிபப்பிராயத்தில் எடுக்கப்பட்ட புகைப்படத்தின் நகலாகவிருந்தபோதிலும் அது அந்தக் கோலையுண்டிருந்த குலசேகரனது படமே தவிர வேறில்லை. தவிரவும் அவன் குற்றம் சாட்டப்பட்டுத் தண்டனை விதிக்கப்பெற்ற விவரங்கள் அதற்கடியில் தெளிவாகக் கூறப்பட்டிருந்ததையும் சந்திரசேகரன் படித்துப் பார்த்துத் தனது சந்தேஹத்தை நிவர்த்திசெய்துகொண்டான்.

குலசேகரன் சீர்கெட்ட ஒழுக்கம் வாய்ந்திருந்தவனே. தவிரவும் குற்ற தண்டனை விதிக்கப்பெற்று அதை அனுபவித்திருந்தவன். பிரகடனமானால் மானக்கேடான நிலைமையில் குமுதவல்லி இருக்கநேரிடும். எல்லோரும் அவளை ஏளனமாய்ச் சுட்டிக்காட்டிப் பேச இடமேற்பட்டு விடுமேயன்றோ!

குமுதவல்லியின் கண்களில் நீர் ததும்பிற்று. சந்திரசேகரனது மனம் கொதித்தது. ஆனால் யாரால் என்ன செய்ய முடியும்!

ஜம்புலிங்கத்தைப் பார்த்துக் குமுதவல்லி, "பாக்கி விஷயங்களையும் தெரிவிக்கலாம்" என்றாள்.

மிகக்கருணையும் பச்சாத்தாபமும் வாய்ந்திருந்தவன்போல் நடித்து ஜம்புலிங்கம், 'அம்மணி! உனது தந்தை அல்பமான குற்றச் செயல்களைச் செய்யப்பட்டவரன்று. சிக்ஷையை அடையநேர்ந்த அந்த மோசடிக் குற்றத்திற்குப் பிறகு அவரது தீரச்செயல்கள் நாலைந்தேதான். ஆனால் ஒவ்வொன்றும் அல்ப சொல்பமான செயல்கள் அன்று. அகப்படாமல் தப்பித்துக்கொண்டதுமன்றி அவரது லாபமோ அபரிமிதமாக ஏற்பட்டதெனலாம்." என்றான்.

என்ன செய்வாள் குமுதவல்லி? ஜமீன்தார் ஜம்புலிங்கத்தின் ஒவ்வொரு சொல்லும் எரிகிற புண்ணில் எண்ணெயைக் காய்ச்சி ஊற்றியது போலிருந்தது குமுதவல்லிக் கெனலாம்.

திரும்பவும் ஜம்புலிங்கம் அவளை நோக்கி, "நான் இதுகாறும் உனது தந்தையின் பிரதாபங்களைப்பற்றிக் கூறினேன். இனி எனது பிரதாபத்தைப்பற்றிக் கொஞ்சம் கூறக்கேட்பாயாக" என்றான்.

சந்திரசேகரன்:— பார்க்குங்கால் பொழுதுவிடியும் வரைக்கும் எங்களை இங்கு தாமதிக்கச் செய்ய எண்ணங் கொண்டிருப்பது போல காண்கிறதே! முடியும் உமது கதையைச் சீக்கிரம்.

ஜம்புலிங்கம்:—சந்திரசேகரா! கொஞ்சமேனும் உலக அனுபவமிராத சிறு பையன் போல நடந்து கொள்ளுகிறாயே! நான் இந்தக் குமுதவல்லியிடம் பேசிக் கொண்டிருக்கையில் குறுக்கே விழுந்து பேசுவது மரியாதைக் குறைவான செய்கையே அன்றோ! அம்மணி! போனாப் போகிறான்! தெரியாதவன்! எனது பிரதாபம் உனக்குப் பிரியமற்றதாக இருப்பினும் எடுத்துள்ள காரியத்திற்குச் சாதகமாவதுடன் என்னைத் தேடி வந்து கேட்டதற்கு நான் கொடுக்கக் கடமைப்பட்ட விவரங்களுமாகும்.

எனக்கு எப்பொழுதுமே குற்ற ஸம்பந்தமான விஷயங்களில் அதிகப் பிரியமுண்டு. ஆதலால் பற்பல ஸந்தர்ப்பங்களில் மாறுவேஷம் பூண்டு துப்பறியும் வேலைகளையும்செய்திருக்கிறேன். பூனைச்சிக்கிட்டு என்ற துப்பறி நிபுணனைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக்கலாம்! அப்பெயர்வழி நானே! அப்பெயருடன் ஒரு துப்பறிச் சங்கத்தில் ஒரு அங்கத்தினனாய் நான்வேலைபார்த்து வந்தபோது உனது தந்தை குலசேகரனைக் கவனிக்க நேர்ந்தது. அவனைப் பற்றிய பல ஸங்கதிகள் எனக்குத் தெரிந்ததென்றாலும் அவனைச் சிக்ஷைக்குக் கொண்டுவரப் போதுமான அத்தாக்ஷி ஏற்படவே இல்லை. அவன் ஒரு பெரும் பெருச்சாளியாயிற்றே! அவனா அகப்பட்டுக்கொள்ளப்பட்டவன்!

இரண்டு வாரங்களுக்கு முன் பம்பாயிலிருந்து, துகாராம் ஜக்ஜீவன் தாஸ் என்ற ஷாவ்கார் ஒருவர் பம்பாய் மெயிலில் சென்னைக்கு வந்துகொண்டிருந்தார். அவரது மனைவியும் அவருடனிருந்தாள். சுமார் இருபதாயிரம் ரூபாய் பெருமான அவளது வைர நகைகளும், அத்துடன் ஐம்பதினாயிரம் ரூபாய் பெறும்படியான வைரக்கற்களும், வைக்கப்பட்டிருந்த ஒரு கைப்பெட்டியை அவள் தனது மடியிலேயே வைத்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் சென்னையில் வண்டியை விட்டிறங்கும்போது அதைக் காணோம்! பிறகு ஏற்பட்ட அமளியோ சொல்லமுடியாது!

உனது தந்தை அந்த ரயிலில் வந்திறங்கினது எனக்குத் தெரியும். நானும் அதே ரயிலில் தான் வந்திறங்கினேன். துப்பறி வேலையில் அமர்ந்திருந்த காரணம் பற்றி அந்தத் துகாராம் ஜக்ஜீவன் தாஸிடம் சென்று "ஐயா! யாதொரு ஆர்ப்பாட்டமும் செய்யவேண்டாம். நான் ஒரு துப்பறிபவன், களவுபோன தங்களது நகைகளைக் கொண்டுவந்து தருவது என் வேலை, கொஞ்சம் பொறுங்கள்" என்றேன். அவரும் அதற்கு ஸம்மதித்தார்.

பணமெனில் பிணமும் வாய் திறக்குமென்பார்களே அன்றோ! உனது தந்தையின் வேலைக்காரர்களில் ஒருவன் மூலமாய் அந்தக் களவுபோன நகைப்பெட்டி அவரது இரும்புப் பெட்டியில் வைக்கப்பட்டிருந்ததை அறிந்துகொண்டேன். அவரது நன்மையைக்கோரிப் பிரகடனம் யாதுமே செய்யாது காதும் காதும் வைத்தாற் போல அந்நகைப்பெட்டியைக் கவர்ந்து வந்து சொந்தக்காரர்களிடம் ஒப்புவித்துவிட எண்ணங்கொண்டேன். ஸமய ஸஞ்சியாக உமது சந்திரசேகரன் வந்து உதவி புரிய நேர்ந்தது. அவ்வளவே! பாக்கி விஷயங்கள் உங்களுக்கே தெரியும். இன்னும் ஏதாவது என்னைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியது உண்டோ?

குமுதவல்லிக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. சந்திரசேகரனுக்கும் என்ன செய்வதென்று ஏற்படவில்லை.

இரண்டொரு நிமிஷங்கள் கழிந்ததும் குமுதவல்லி ஜம்புலிங்கத்தைப் பார்த்து, "ஸரி! இப்பொழுது நாங்கள் செய்யப்போவது நன்றி கெட்ட செய்கையாக உம்மால் கருதப்படலாம். கூறுமிடத்து நாங்கள் இந்த அறையின் வெளிப்புறத்தில் கால் வைத்ததும் வைக்காததுமே நீர் கூச்சலிட்டு எங்களைத் தப்ப முடியாமல் செய்து விடவும் கூடும் என்ற பயம் எங்களுக்குண்டு. ஆதலால் எங்களது ஸௌகரியத்தைக் கருதி நாங்கள் கொஞ்சம் முன் ஜாக்கிரதை எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியமென்று ஏற்படுகிறது. தப்பி ஓடி விடப் போதுமான அவகாசம் எங்களுக்கேற்பட்டால் போதும்" என்றாள்.

ஜம்புலிங்கம்:— ஐயோ இவ் விஷயத்தில் யார் தப்புக் கண்டு பிடிப்பார்கள். இந்த அற்ப அக்கிரம நடத்தைக்காக யாராவது உங்களைப் போலீஸார்வசம் ஒப்புவிப்பார்களோ? தவிரவும் தகப்பனார் எப்படிக் கொலையுண்டார் என்றறிய ஒரு பெண்மணி முயற்சிசெய்வது மஹா ஸாஹஸந்தானே! பிதிர் வாஞ்சையைப் பின்னர் எப்படித்தான் காட்டுவது! குலசேகரன் உன்னைக் கண்ணுக்குக் கண்ணாகக் கருதி நடந்து வந்தது எனக்கு நன்கு தெரியும்.

குமுதவல்லி:— அதெல்லாம் ஸரியே. ஆயினும் முன் ஜாக்கிரதையுடன் நடந்து கொள்ளல் நன்றல்லவா? சந்திரசேகரா! அந்தப் படுதாவின் கயிறுகளை அவிழ்த்துக் கொண்டுவா பார்க்கலாம்!.

சந்திரசேகரனும் இரண்டு மூன்று பட்டுநூல் கயிறுகளைப் படுதாவிலிருந்து அவிழ்த்துக் கொண்டு வந்து அவளிடம் கொடுத்தான்.

ஜம்புலிங்கம்:—என்ன செய்வதாக எண்ணம்?.

குமுதவல்லி:— ஒன்றுமே அப்படி விசேஷமான காரியம் இல்லை! உமது கைகளையும் கால்களையும் அசைக்க முடியாமல் கட்டி விட்டுப் போகப் போகிறோம! அவ்வளவே! சந்திரசேகரா! நான் துப்பாக்கியும் கையுமாக இருக்கிறேன். நீ உன்வேலையைப்பார்! ஜம்புலிங்கம்! அசைந்தீரோ தொலைந்தீர்! கொஞ்சம் இடம் கிடைத்தாலபோதும் எனக்கு! காரணமின்றிச் சுட்டுக் கொல்ல மனம் இடங்கொடுக்க வில்லை.

(தொடரும்.)

## இந்திய வர்த்தமானம்.

(6-ம் பக்கம் தொடர்ச்சி).

குத் தூக்கிக்கொண்டு போயினர். பலத்த காயமடைந்தவரின் கைகள் இரண்டும் துண்டிக்கப்பட்டன. போலீஸார் அந்த வீட்டை நான்கு மணிநேரம் சோதித்து காயமடைந்தவர்கள் உட்பட நால்வரைக் கைது செய்தனர். வெடிகுண்டு செய்வதற்குதவும் சாமான்களான 'பொடாஷ்', சிறு இரும்பு ஆணிகள், முதலியவைகளும் மற்றுஞ் சில அபாயகரமான சாமான்களும் இவ்வீட்டில் அகப்பட்டன. கைது செய்யப்பட்டவர்களின் வீடுகள் பூட்டிடப்பட்டிருக்கின்றன. அங்கு பலமான காவல் போடப்பட்டிருக்கிறது. ஆஸ்பத்திரியில் இருப்பவர்கள் குணமடைந்து வருகிறார்கள். அத்தோடு மறியல் சங்க விடுதியும் போலீஸாரால் சோதனையிடப்பட்டது. கைது செய்த நால்வரும் மறியல் சங்கத்தொண்டர்கள் எனச் சொல்லப்படுகிறது. கொலை செய்ய முயற்சித்ததாகவும், வெடிகுண்டு சட்டப்படியும், சதியாலோசனை செய்ததாகவும் நான்கு எதிரிகள் மீதும் குற்றஞ்சாட்டப்பட்டிருக்கிறது. 18 வருஷங்களுக்குப் பிறகு கூர்ஜாத்தில் முதல் முதலாக இப்போதுதான் வெடிகுண்டு விபத்து நடந்தது.

---

### விநோதமான பகல் திருடன்.

திருத்துறைப்பூண்டியில் மளிகை வியாபாரி ஸ்ரீமான் வ. சூரியநாராயண சாஸ்திரியிடம் 25-ந் தேதியன்று காலையா8ரா திருச்சியைச் சேர்ந்த ஒருவர் வந்து தனக்கு 3 அரிசி மூட்டைகள் விலைக்கு வேண்டுமென்று கேட்டார். உள்ளிருந்த மூட்டைகள் வெளியில் கொண்டு வரப்பட்டு வண்டியிலேற்றப்பட்டதும், தன்னிடமிருந்த ஒரு நூறு ரூபாய் நோட்டு ரயிலடியில் வேறு ஒருவரிடமிருப்பதாகவும் 3 மூட்டைகளின் அரிசியின் கிரயம்போகப் பாக்கியைக் கொடுத்தால் நூறு ரூபாய் நோட்டை வாங்கி அனுப்புவதாகச் சொன்னதாகவும், கடைக்காரரும் அதை நம்பி அரிசியின் கிரயம் போக பாக்கி ரூபாயை மேற்படியாரிடம் கொடுத்து விட்டு நோட்டை வாங்கி வரக் கடைப்பையனை அவனுடன் அனுப்பியதாகவும், சிறிது தூரம் சென்றதும் பையனைத் தனக்கு நெய் மாதிரிக்கு வாங்கி வரும்படிச் சொல்லியனுப்ப பையனும் அதை நம்பிக் கடைக்கு வந்ததாகவும் அதற்குள் திருடன் வண்டிக்காரனிடம் ஏதோ ஓரிடத்தில் அரிசி மூட்டைகளை இறக்கச் சொல்லிவிட்டு ஓட்டம் பிடித்ததாகவும் வண்டிக்காரன் பிறகு மூட்டைகளைக் கடைக்காரரிடம் கொண்டு வரவே கடைக்காரரும் தாம் ஏமாந்துபோய் விட்டோமென்று திருடனைப் பிடிக்கப் போலீஸ் உதவியுடன் காரில்சென்று நீடாமங்கலம ஸ்டேஷனில்சந்தேகத்தின்மேல் ஒருவரைப் பிடித்துக் கொண்டு வந்து ரிமாண்டில் வைக்கப்பட்டிருக்கிறதாகவும் தெரிகிறது.

---

### காணமற்போன ஸப் இன்ஸ்பெக்டர்கள்.

சேலகதிற்கருகில காளப்ப நாயக்கன் பட்டியில் சேந்தமங்கலம் கலால், போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டர்கள் 23-ந்தேதி இரவு ஒரு கூட்டத்தில் தாககப்பட்டனர். ஸ்ரீமான்கள் பால்,சைதன்யமூர்த்தி ஆகிய இரு ஸப் இன்ஸ்பெக்டர்களும் கள்ளத்தனமாக ஒரு வீட்டில் சாராயம் காய்ச்சப்படுவதாகச் செய்தி கிடைத்ததின்பேரில அவ் வீட்டைச் சோதனைபோடச்சென்றதாயும் அவர்களுடன் சில சேவகர்களும் வந்திருந்ததாயும் கூறப்படுகிறது. ஆனால் கூட்டம் தாக்கியபோது அவர்கள் ஓடிப்போய்விட்டனர். இரண்டு உத்தியோகஸ்தர்களும் நன்றாக அடிக்கப்பட்டு ஒரு அறையில பூட்டப்பட்டனர். மறுநாட் காலையில் அவர்களைத் தாக்கியவர்கள் மீது எவ்வித நடவடிக்கையுமெடுத்துக்கொள்ளப்பட மாட்டாதென்று எழுத்து மூலமாக உறுதிமொழி வாங்கிக்கொண்டு அவர்கள் விடப்பட்டனராம். ஜில்லா சூபரின்டெண்டெண்டும் டெப்டி சூபரின்டெண்டும் ரிசர்வ்போலீசுடன் அங்கு சென்றபோது இரண்டு உத்தியோகஸ்தர்களும் சொற்ப காயத்துடன் வெளியே வந்திருந்தனர். அவர்களைத் தாக்கியவர்கள் ஓடிப்போய் விட்டனர். போலீஸ் பந்தோபஸ்து வைக்கப்பட்டு உத்தியோகஸ்தர்கள் மாலையில் சேலத்திற்குத் திரும்பி வந்தனர்.

---

### தங்கஸ்தூபி களவு போயிற்று.

பரமக்குடியில மஞ்சபுத்து செட்டி ஜாதியார்களுக்குப் பாத்தியமான ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்வரர்ஸ்வாமி கோவில்தங்கஸ்தூபி களவு போய்விட்டது. இதைப் பற்றிப் புலன் விசாரித்து வருகிறார்கள். பொது ஜனங்களுக்குள் மிகுந்த பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது. தங்கஸ் தூபி வைத்துச் சுமார் 20 வருஷந்தான் ஆகிறது.

# வியாபாரப்பகுதி

## நாணய மாற்றம்.

| | | பென்ஸ் |
|---|---|---|
| லண்டன்மேல் | | |
| தந்தி விற்கிற விலை | 17. | 25-32 |
| தரிசன உண்டி விற்கிற விலை | 17. | 13-16 |
| தந்தி வாங்குகிற விலை | 17 | 13-16 |
| தரிசனஉண்டி வாங்குகிற விலை | 17. | 27-32 |
| 1-மாத தவணை ,, | 17. | 29-32 |
| 2-மாத தவணை ,, | 17. | 15-16 |
| 3-மாத தவணை ,, | 18. | 31-32 |
| 4-மாத தவணை ,, | 17. | 31-32 |
| 5-மாத தவணை ,, | 18 | 1-8 |

பிரான்ஸ் மேல் தரிசன உண்டி விற்பனை ரூ. 100-க்கு பிராங்கு 900.

ஜர்மனி தரிசன உண்டி விற்பனை ரூ. 100-க்கு மார்க்கு 148.

அமெரிக்கா தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரூ. 279.

அமெரிக்கா தரிசன உண்டி வாங்குவது டாலர் 100-க்கு ரூ. 274½.

சிங்கப்பூர் தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரூ. 158

சிங்கப்பூர் தரிசன உண்டி வாங்குவது டாலர் 100-க்கு ரூ. 153

ஹாங்காங் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை டாலர் 100-க்கு ரூ. 95.

ஷாங்ஹாய் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை டேய்ல் 100-க்கு ரூ. 115.

ஜப்பான் தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை என் 100-க்கு ரூ. 139

ஜப்பான் 2-மாத தவணை உண்டி வாங்குவது என் 100-க்கு ரூ. 134.

ஜாவா தந்தி அல்லது தரிசன உண்டி விற்பனை ரூ. 100-க்கு கில்டர் 88.

ஜாவா தந்தி அல்லது தரிசன உண்டி வாங்குவது ரூ. 100-க்கு கில்டர் 92

பாரிஸில் லண்டன் மேல் தந்தி பவுன் 1-க்கு பிராங்கு 123.59

லண்டனில் அமெரிக்கா மேல் தந்தி பவுன் 1-க்கு டாலர் 4.85 5/8

இம்பீரியல் பாங்கு வட்டி 6%

பாங்க் ஆப் இங்கிலாந்து வட்டி 3%

## தங்கம், வெள்ளி.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| சவரன் சில்லரை | 13 | 8 | 9 |
| சீமை கட்டி தங்கம் தோலா 1-க்கு | 21 | 13 | 0 |
| ,, பம்பாய் கட்டி ,, | 21 | 5 | 0 |
| வெள்ளி ரூ. 100 எடை | 44 | 10 | 0 |
| ,, ரூ. 1 எடை | 0 | 7 | 9 |

## சர்க்கார் கடன் பத்திரங்கள்

| | முதல் ரூ. அ. பை. | வரை. ரூ. அ. பை |
|---|---|---|
| 3½% கவர்ன்மெண்டு பேபர் | 62 15 0 | 63 11 0 |
| 4% கடன் 1931—36 | 89 14 0 | 90 10 0 |
| 4% கடன் 1934—37 | 88 14 0 | 89 10 0 |
| 4% கடன் 1960—70 | 73 10 0 | 74 6 0 |
| 4½% பாண்டு 1934 | 94 11 0 | 95 1 0 |
| 4½% கடன் 1955—60 | 82 10 0 | 83 6 0 |
| 5% யுத்தக்கடன் 1929—47 | 94 0 0 | 94 13 0 |
| 5% பாண்டு 1935 | 95 12 0 | 96 8 0 |
| 5% கடன் 1939—44 | 93 10 0 | 94 6 0 |
| 5% பாண்டு 1933 | 99 8 0 | 100 4 0 |
| 5% கடன் 1945—55 | 100 2 0 | 101 14 0 |
| 6% பாண்டு 1931 | 100 10 0 | 101 6 0 |
| 6% பாண்டு 1932 | 101 9 0 | 102 5 0 |
| 6% பாண்டு 1933/36 | 100 4 0 | 101 0 0 |
| 5½ " மைசூர் கடன் 1938 | 100 8 0 | 101 0 0 |
| 6½% மைசூர்கடன் 1940 | 104 0 0 | 104 8 0 |
| 6½% ,, 1941—51 | 112 0 0 | 112 8 0 |
| 7% ,, 1931 | 101 6 0 | 101 14 0 |

## ரேவு மார்க்கெட்.

குறிப்பு:—மூட்டை விலைகளுக்கு லாட் உவி ரூ. 0—0—9 பை சேர்த்துக்கொள்ள வேண்டியது.

குருணை :—

| | முதல் ரூ. அ. பை. | வரை ரூ. அ. பை |
|---|---|---|
| ரங்கூன் குருணை ஆபீஸ்ரகம் (190 ரா) மூ 1க்கு | | |
| A-1 | 11 0 0 | 12 8 0 |
| A-2 | 9 12 0 | 11 4 0 |
| A-3 | 8 14 0 | 10 12 0 |
| B-1 | 10 0 0 | 11 8 0 |
| B-2 | 9 0 0 | 10 12 0 |
| B-3 | 8 12 0 | 10 8 0 |
| B-4 | 8 0 0 | 9 0 0 |
| C-1 | 8 0 0 | 10 0 0 |
| C-2 | 8 0 0 | 8 12 0 |
| C-3 | 6 12 0 | 7 4 0 |
| பஜார் நெ. 1 | 9 12 0 | 10 8 0 |
| ,, நெ. 2 | 9 4 0 | 10 0 0 |
| ,, நெ. 3 | 7 0 0 | 8 0 0 |
| ,, நெ. 4 | 5 8 0 | 6 8 0 |
| செய்கோன் நொய் 0 ரா. | | |
| நெ. 1 | 10 12 | 11 0 0 |
| ,, நெ. 2 | 10 4 0 | 10 8 0 |

பச்சரிசி:—

| | |
|---|---|
| டில்லி போகம் அரிசி 166 ரா. | 11 12 0 |
| தெலுவி 166 ரா. | 10 14 0 |

**புழுங்கல் அரிசி:—**

| | |
|---|---|
| சிதாசா அரிசி 166 ரா. | 11 8 0 |
| நெ. 2 | 11 4 0 |
| லாங் பாடி அரிசி | 9 0 0 |
| டெல்டா மெஷின் 1 நெ. 162 ரா. மூ. 1-க்கு | 8 14 0 |
| ,, நெ. 2. மேல்தரம் | 8 8 0 |
| ,, ,, நடுத்தரம் | 8 4 0 |
| ,, ,, கீழ்த்தரம் | 8 0 0 |
| மில்ச்சர் அரிசி 164 ரா: | ஸ்டாக்கில்லை |
| உள்ளூர் வாடன்சம்பா | 9 8 0 |
| ,, கார் (சிகப்பு) | 8 8 0 |
| ,, சிறுமணி | 11 9 0 |
| சாகரு பழயது | 10 8 0 |
| ,, புதியது | 10 0 0 |

புட்டரிசி:—

| | |
|---|---|
| புட்டரிசி (வெள்ளை) 140 ரா. மூ. 1-க்கு | ஸ்டாக்கில்லை |
| ,, (கருப்பு) ,, | ,, |

**நவதான்யங்கள்:—**

| | |
|---|---|
| மொச்சை சுஜின் 178 ரா. | 17—19 |
| ஷை மாந்தலே ,, | 16—17 |
| ரங்கூன் பயறு 195 ரா | ஸ்டாக்கில்லை |
| சிங்கப்பூர் பயறு 200 ரா. | 11 8 0 |
| சிகப்பு பீன்ஸ் 190 ரா மூ. 1-க்கு | 9½—100 |
| ரங்கூன் வெள்ளைபீன்ஸ் 192 ரா. | 6 8 0 |
| கருப்பு மூக்கு பட்டாணி | 12 12 ¼ |
| ஆரு பட்டாணி | 11 12 0 |
| ஜாவா காராமணி 200 ரா. பெரியது | 11 4 0 |
| ,, சிறியது | 11 0 0 |
| ராஜ ரன்கம் உளுந்து 220 ரா. | 12 12 0 |
| கடகம் உளுந்து 218 ரா. மூ. 1-க்கு | 11 0 0 |

கடலை:—

| | |
|---|---|
| கராச்சி கடலை 205 ரா. | 11 4 0 |
| பஞ்சாப் ¾ கடலை | 11 0 0 |
| பஞ்சாப் கடலை 205 ரா | 11 0 0 |
| பியா கடலை 205 ரா | 10 0 0 |
| ரங்கூன் கடலை 195 ரா. | 9¼—10 |
| கல்கத்தாகடலை 192 ரா. நெ. 1 | ஸ்டாக்கில்லை |

கடலை பருப்பு:—

| | |
|---|---|
| ரங்கூன் கடலைபருப்பு 190 ரா. | 10—11 |
| கராச்சி கடலைபருப்பு 208 ரா. | ஸ்டாக்கில்லை |
| கல்கத்தா கடலை பருப்பு 192 ரா. | 9¾—10¾ |
| கேசரி பருப்பு 192 ரா. | 9 8 0 |

**துவரம் பருப்பு:—**

| | |
|---|---|
| கல்கத்தா205 ரா | 11¼—12 |
| கான்பூர்205 ரா. | 12¾—13 |
| கேஷரி மெஷின் 205 ரா. | 11 0 0 |
| ,, நெ. 2 ,, | 10 12 0 |
| ,, நெ. 3 ,, | 10 8 0 |
| திருப்பத்தூர் கொள்ளு 53 படி மூ. 1-க்கு | 6 8 0 |

**கோதுமை, மாவு-**

| | |
|---|---|
| கோதுமை கண்டவா | 11 4 0 |
| மரிக்கன் மாவு | 10 8 0 |
| கடலை மாவு விஷ்ணுமார்க்கு | 11 12 0 |
| ,, சிவாஜி மார்க்கு | 11 8 0 |

## இரும்பு எஃகு சாமான்கள்.

| | முதல் ரூ. அ. பை. | வரை ரூ. அ. பை. |
|---|---|---|
| ஆர். ஸ்டீல் கர்டர்கள் (காண்டினென்டல்) அந்தர் 1-க்கு | 6 0 0 | 8 0 0 |
| ஆர். ஸ்டீல் கர்டர்கள் (டார்மென்லாங்கு) அந்தர் 1-க்கு | 7 10 0 | 9 10 0 |
| மைல்டு ஸ்டீல் சானல்கள் (காண்டினென்டல்) அந்தர் 1-க்கு | 7 0 0 | 8 0 0 |
| மைல்டு ஸ்டீல் சானல்கள் (டார்மென்லாங்கு) அந்தர் 1-க்கு | 8 0 0 | 9 8 0 |
| எக்ஸ்பாண்டென் மெடல் சதுர அடி 1க்கு | | |
| 3 மெஷ் | 0 1 0 | 0 3 2 |
| 1½ மெஷ் | 0 1 6 | 0 3 0 |
| ¾ மெஷ் | 0 2 0 | 0 3 6 |
| 3/8 மெஷ் | 0 2 0 | 0 4 1 |

| | | |
|---|---|---|
| முள்ளு கம்பிகள் ரோல் 1-க்கு | ரூ. | 9 8 0 |
| ,, அந்தர் 1-க்கு | ரூ. | 12 0 0 |
| துத்துநாகம் வளைவு தகடுகள் 6, 7, 8, 9 அடி—24 அந்தர் 1க்கு | ரூ. | 10 2 3 |
| 10 அடி—24 | ,, | 10 4 3 |

கண்டி 1-க்கு விலை கீழ்க்கண்டவாறு:—

| | |
|---|---|
| சட்டம் ¾ × ¼ ரூ. | 30 0 0 |
| திரணைக்கம்பி 7/16, 8 | 25 0 0 |
| ,, 15/32, ½ | 26 0 0 |
| ,, 5/8 மு 1½ வரை | 27 8 0 |
| சதுரம் 7/16 | 25 0 0 |
| ,, 15/32, ½ | 25 0 |
| ,, 5/8 மு 2 வரை | 28—29 |
| இருசு துண்டு 1½ மு 2 வரை | 27½—28 |
| சதுரக்கட்டு 6 அடி 12 அடி 3/16 மு 3/8 வரை | 22½—24 |
| பொத்துச் சட்டம் 1¼ × ⅜ முதல் 1½ × வரை | 34 0 0 |
| சீமைச் சட்டம் 1 × ¼ முதல் 4 × வரை | 62—65 |
| சீமை இருசு துண்டு 1¼ முதல் 2 வரை | 62—70 |
| தகடு கட்டு 2 தகடுகள் | 32 0 0 |
| ஷை 3, 4, 5 | 36 8 0 |
| ஷை 6, 7 | 42 8 0 |
| 8, 9 | 43 0 0 |
| ஷை 10, 11, 12 | 44 0 0 |
| வில்கட்டு 1 × ¼ முதல் 3 × | 39—40 |
| பீப்பா கட்டு ¾ × 1/16 மு 2 × 1/16 வரை | 31 1 0 |
| ஷை ¾ × ⅛ | 31 2 0 |
| ஷை 1 × ⅛ மு 4 × ⅛ வ | 32 0 0 |
| மட்ட எஃகு 1 மு 1 வரை | 26 0 0 |
| உயர்ந்த எஃகு ஷை | 3) 0 0 |
| உளிக்கட்டு L A X | 18 12 0 |
| L × மார்க்கு | 18 0 0 |
| Poomarc (பூமார்க்கு) | 17 0 0 |
| லாடாணி | 42 0 0 |
| ஆணி பீப்பாய் 8—9 | |
| சாதா தகடு 26 கேஜ் | 12 8 3 |
| 24 கேஜ் | 11 8 3 |
| பழைய அரம் பட்டை மணங்கு 1 க்கு | 3 0 0 |
| "சதுரம்" | 4 0 0 |
| மண்வெட்டி டெஜன் 1-க்கு | |
| முதலை மார்க்கு சிகப்பு லேபில் | 8 4 0 |
| ,, பச்சை ,, | 7 4 0 |
| ரெட்டைக்கொடி | 6 12 0 |
| பூ மார்க்கு | 7 12 0 |
| கடாமார்க்கு | 6 12 0 |
| தராசு ,, | 6 12 0 |
| குதிரை ,, | 8 12 0 |




## உஷ்ண ஸஞ்சாரம்.

II

(கௌசிகன் எழுதியது.)

கடின பதார்த்தங்களின் அமைப்புக்கும் த்ரவபதார்த்தம் வாயுக்களின் அமைப்புக்கும் அதிக வித்யாசமுண்டு. எல்லா வஸ்துக்களும் சிறிய அணுக்களால் ஆக்கப்பட்டிருந்தாலும் த்ரவ பதார்த்தத்தின் அணுக்கள் ஒன்றொன்மேலொன்றாய் யாதொரு சிரமமின்றி புரளக் கூடும். இந்தக் குணமிருப்பதால் தான் எந்த த்ரவ பதார்த்தமும் அது ஊற்றிவைத்திருக்கும் பாத்திரத்தின் உருவத்தை ஏற்பதோடு அதன் மேல்மட்டமும் தட்டையாய் ஆய்விடுகிறது. இதன் அணுக்கள் தாங்களாகவே ஒன்றனமேலொன்றாய்ப் புரண்டு உருளக்கூடிய சக்தி வாய்ந்திருப்பதால் பல த்ரவ அணுக்களும் நெருக்கமாய் அமைந்திருக்கின்றன. ஆகையால் த்ரவ பதார்த்தத்தை வாயு போலவாவது கடின பதார்த்தம் போலாவது அளவு சிறுக்கும்படிச் செய்யமுடியாது. நமது காற்று போன்ற வாயு பதார்த்தங்களின் அணுக்கள் மிக்க விலகி அதிக இடைவெளியுள்ளனவாய் அமைக்கப் பெற்றிருக்கின்றன. எந்த வஸ்துவையும் குறுகும்படி இறுகக் கட்டும்போது அணுக்களுக்கிடையிலுள்ள இடைவெளியையே குறைக்கிறோம் அணுக்களையே சிறியதாகச் செய்வது நமது நோக்கமுமன்று, அது முடியவும் முடியாது. ஸ்பாஞ்ஜ் என்னும் கடற் பஞ்சு தனனிடம் ஏராளமாகத துவாரத்தை யுடையது. இதைக் கையிலெடுத்துப் பிழிந்தால் இதன் பழைய அளவில் கால் வாசிக்கும் குறையும்படிக் குறுக்கலாம். இதில் பதார்த்தம் கொஞ்சம், இடை வெளி தான் அதிகம் இதே போல் வாயு பதார்த்தங்களுடைய அணுக்களுக்கிடையில இடைவெளியே அதிகமாயும் பதார்த்தம் இருக்குமிடம் குறைவாயுமிருக்கும். கடினபதார்த்தத்திலும இடைவெளி வாயுக்களில உள்ளதுபோல அவ்வளவில்லாமல் இரண்டணுக்களுக்கிடையிலுள்ள இடம அணுக்களை விடப் பெரியதாயிருக்கும். இந்தக் காரணத்தால் வாயுக்களின் பரிமாணத்தைப் பன் மடங்கு குறைக்க முடியும், கெட்டி பதார்த்தத்தைக் கொஞ்சம குறைக்க முடியும்; ஆனல் த்ரவ பதார்த்தத்தின் பரிமாணத்தைக் குறைப்பது அசாத்தியம்.



13—12—1930-ல் நன்னிலத்திற்கு மேற்கில் மூன்று மைல்தூரத்திலுள்ள ஸ்ரீவாஞ்சயம் என்ற க்ஷேத்திரத்தில் நடந்த ரதோத்ஸவக் காட்சி. T.R.

த்ரவபதார்த்தங்களின அணுக்கள் வெகு சமீபத்தில் இருப்பதாயும் அவை புரளக் கூடிய



சக்திவாய்ந்ததாயும். வாயுவின் அணுக்கள் மிக்க இடைவெளியோடு விலகி ஓடித்திரிவதாயும் சொன்னேன். கெட்டிபதார்த்தத்தின் அணுக்கள் அதிகச் சலனத்துக்கு இடமில்லாமலும், காலில் விலங்கு போடப்பட்டவன் ஓரிடத்தில் கட்டப்பட்டிருந்தால் சிறிதளவு நகர முடிந்தும் வெகு தூரம் செல்ல முடியாதிருப்பதுபோல் கொஞ்சம் கொஞ்சம் அசையக்கூடியவைகளாயிருந்தாலும் அணுவுக்கணு பலமான பந்தமுடையவைகளாயிருக்கின்றன இப்படிப்பட்ட அமைப்புடைய கெட்டி பதார்த்தத்தில் உஷ்ணம் எப்படி வியாபிக்கிறதென்று இந்த வாரத்தில் ஆராய்வோம். ஒரு நீண்ட இரும்புக்கரண்டி அடுப்பில இடப்பட்டிருக்கிறது. அதன் குழிவான பாகம் நெருப்பிலிருக்கிறது. அந்த பாகத்தை அ என்போம். இதற்குக் கொஞ்சம் வெளியே யுள்ள பாகம் ஆ; நெருப்பினின்று இ என்ற பாகம் இன்னும் அதிக தூரத்தில இருக்கிறது. ஈ என்ற பாகம் இதை விட வெளியே யுள்ளது. உ என்றது கரண்டியின் காம்பு. இதைத்தான் நாம கையால் பிடிக்கிறோம். கரண்டியின் குழிவு அ நெருப்புக்குள் இருப்பதால் நெருப்பின் உஷ்ணத்தை சீக்கிரம அடைகிறது. அடுப்பின் உஷ்ணம் அவிலிருந்து ஆ வுக்கு வருகிறது. அ என்ற பாகம அதிக சூடானது, ஆ அவ்வளவு சூடில்லாமல இருக்கிறது. நெருப்பிலிருந்து அ சூட்டை நேரே பெறுகிறது. அ விலிருந்து சூடு ஆ வுக்குவரும்போது நடுவில் காற்றுக்குக் கொஞ்சம் போய் விடுகிறது. அ வுக்குள்ள சூடு ஆ வுக்குக் கிடையாது. அ வினிடமிருந்தும் ஒரு பாகம் உஷ்ணம் காற்றுக்குப் போய் விட்டாலும் அதை அடுப்பிலுள்ள நெருப்பு ஒரே சூடான ஸ்திதியில் வைத்திருக்கிறது. அ விலிருந்து உஷ்ணம் ஆ வுக்கு வருகையில காற்றுக்குக் கொஞ்சம் நஷ்டமானதாலும் ஆ வுக்கு நெருப்போடு நெருங்கிய சம்பந்த மில்லாததாலும் அவை விட ஆ குறைந்த உஷ்ண முடையதாகவே யிருக்கும். ஆ வினிடமிருந்து இ க்கு

சூடு வருகையில் இடையில் காற்று கொஞ்சம் முன்போல் பறித்துக்கொள்ளும். இதே மாதிரியாக உஷ்ணம் உவந்து சேருமுன் படிப்படியாய்க் குறைந்து கரண்டியின் நுனியாகிய உ கையால் தொடக்கூடிய சூடுடையதாகவும் இருக்கலாம்.

சென்ற வாரம் ஜலத்தின் மூலம் உஷ்ணம் வியாபிக்கும் விதத்தை விளக்கினேன். அதற்கும் கெட்டி பதார்த்தத்தின் வழியாய்ச் சூடு செல்வதற்கும் உள்ள வித்தியாசம் குறிப்பிடத்தக்கது. ஜலத்துக்கு அடியில் சூடு கொடுத்தவுடனே சூட்டையடைந்த ஜலமே மற்றபாகங்களுக்கும் சென்று சூடு வியாபிக்கும்படிச் செய்கிறது. கரண்டி விஷயத்தில் கரண்டியின் பலபாகங்களும் அப்படியே ஒரேயிடத்தில் இருந்துகொண்டுசூடு தாண்டித்தாண்டி செல்லும்படி இடங்கொடுக்கின்றன. கரண்டியில் நெருப்புக்குக் கிட்டவிருக்கும் பாகத்தைவிட தூரவிருக்கும்பாகம் குறைந்த சூடுள்ளதாய் இருக்கிறது. ஜலத்தில் நெருப்பிலிருந்து அதிக தூரத்திலிருக்கும் மேல் பக்கமும் அடிப்பக்கம் போல் ஒரே சூடுள்ளதாய் ஆய்விடுகிறது. கரண்டியின் இரண்டு கோடிகளும் ஒரு பொழுதும் ஒரேமாதிரி உஷ்ணமுடையவைகளாக இருக்க மாட்டா. கெட்டி பதார்த்தத்தில் உள்ள அணுக்களின் வழியாகச் சூடு தாண்டித்தாண்டிச்செல்லும்விதத்தை ஆங்கிலத்தில் Conduction என்பார்கள்.

கெட்டி பதார்த்தம், திரவ பதார்த்தம், வாயு எதுவுமில்லாத இடம் சூரியனுக்கும் பூமிக்கும் இடையிலுண்டு. இங்கே கெட்டி பதார்த்தமும் ஜலம் அல்லது வேறெவ்விதத் திரவ பதார்த்தமும் இல்லையென்பது நமக்குத் தெரியும். நம்மைச் சுற்றிலுமிருக்கும் காற்று மேலே போகப் போக மிகவும் மெலிந்து போவதும், ஐந்து மைல் மேலே போவதற்குள் நாம் சுவாசிக்க அவசியமான பிராணவாயு போராமலிருப்பதும், தாராளமாய் இடம் கொடுத்தாலும் நம் வாயு மண்டலம் 200 மைலுக்கு மேல் இல்லையென்றும் முன்னமேயே சொல்லியிருக்கிறேன். அதற்கு மேல் சூரியன் வரையில் அநேக லட்சம் மைல் தூரம் இருக்கிறது. இவ்விடத்தில் எதுவுமில்லை. இதையே ஆகாசம் என்கிறோம். வெகுதூரம் வியாபித்திருக்கும் நிர்மலமான வெறும் வெளிதான் நமக்கு நீலமாகக் காணப்படுகிறது. சூரியனிடமிருந்து நமக்கு வரும் வெளிச்சம் எப்படி வருகிறதோ அதேவிதமாக உஷ்ணமும் வருகிறது. இப்படி வரும்போது இடையில் சூடு எதன்மேலும் படுவதற்கில்லை. உயர்ந்த மலையின் சிகரத்தில் பட்டால் அந்த சிகரம் உஷ்ணப்படுகிறது. மலையின் உச்சியில் உள்ள காற்று குளிர்ந்ததாயிருப்பதால் சூரியனுடைய வெப்பம் அதிகமாய் அங்கே அறியக்கூடவில்லை. சில மலையுச்சிகள் ஒரு போதும் கரையாத பனிக் கட்டியால மூடப்பட்டிருக்கும். நாம் வாசம் செய்யும் பூமிமட்டத்துக்கு மேல் நாலைந்து மைல் சூரியனுக்குக் கிட்ட அந்த இடம் இருந்தாலும் வேறு காரணங்களால் குளிர்ந்த அவ்விடத்தில் சூரியன் கிரணம் குளிர்ந்து போய்விட்டதுபோல் தோன்றும். இடையிலுள்ள பதார்த்தத்தை உஷ்ணப்படுத்தாமல் வெளிச்சம் போல் வேகமாய் செல்லத்தக்க இவ்வித உஷ்ண வியாபகத்துக்கு மேற்தேசத்தார் Radiation என்கிறார்கள்.



சிறுவர் கதை

## போஜ சக்ரவர்த்தியின் தலைவலி.

முன்காலத்தில் போஜன் என்ற பிரஸித்திபெற்ற சக்ரவர்த்தி அரசாட்சி செய்து வந்தான். அவனுடைய சபையில்தான் காளிதாஸக்கவி சக்ரவர்த்தியும் இருந்தான். போஜன் எல்லோராலும் போற்றப்பட்டு நீதிதவறாமல் செங்கோல் செலுத்திவந்தான். போஜன் சகல கலைகளையும் கற்றவன் யோகாப்பியாஸம் செய்துவந்தவன். பிரதிதினமும் ஜலத்தை உட்கொண்டு உள்ளிருக்கும் கபவாத பித்தங்களை வெளியிலெடுத்து தேஹத்தை சுத்தமாக வைத்துக்கொள்வது அரசனின் வழக்கம். ஒரு நாள் அவன் உட்கொண்ட ஜலத்தில் தேரையின் முட்டையொன்று இருந்தது. அது அவன் தேகத்தில் புகுந்து



மூளைக்கு ஏறி கபாலத்திற்குள் தங்கிவிட்டது அரசனுக்குத் தீராத் தலைநோய் கண்டது. பெயர் பெற்ற பல வைத்தியர்கள் வந்து பலவித சித்ஸைகள் செய்த போதிலும் அரசனுக்குக்



குணமேற்படவில்லை. அரசனும் ஸ்மரணை தப்பிக் கிடந்தான்.

போஜராஜன் ஆபத்தான நிலையிலிருப்பது தேவலோகத்திற்கு எட்டியது. போஜனைப் போன்ற மானிடரைக்காண்பதரிதென்றும் அவனை எப்படியாவதுகாப்பாற்ற வேண்டுமென்றும் தேவேந்திரன் தேவ வைத்தியரான தன்வந்தரியை அனுப்பினார். தன்வந்தரி மானிட வேடம் பூண்டு போஜன் அரண்மனைக்கு வந்து தான் அரசனைக் குணப்படுத்துவதாக வாக்களித்தார். அவருடைய முகதேஜஸைக் கண்ட எல்லோரும் அவரை வணங்கி அரசனிடம் அழைத்துச் சென்றார்கள். உள்ளிருந்தவர்களை எல்லாம் வெளியில் போகச் செய்து விட்டு தன்வந்திரி தமது சிகித்ஸையை ஆரம்பித்தார்.



சபையோர்களுடனிருந்த காளிதாஸனுக்கு மாத்திரம் அவர் சாதாரண மனிதனல்லவென்ற சந்தேகம் உண்டாகி, ஒளிந்து கொண்டு வைத்தியர் செய்யும் சிகித்ஸையைக் கவனித்து வந்தான். தன்வந்தரி அரசனை முற்றிலும் சோதித்து ஒரு விதத் தவறையும் காணாமல் கபால சோதனை செய்யத் தொடங்கினார். அரசனுடைய மண்டையோட்டின் மூடியைத் திறப்பதுபோல் திறந்து வைத்தார். அப்பொழுது மூளையில் தேரை ஒட்டியிருப்பதைக் கண்டார். தேரையை எடுக்க முயன்றால் மூளை சிதறிவிடுமென்று அவருக்குத் தெரியுமாதலால் என்ன செய்வதென்று சிறிது ஆலோசித்தார்.

அப்பொழுது ஒளிந்துகொண்டிருந்த காளிதாஸன், பக்கத்தில் ஒரு [illegible] ஜலத்தைத் தலையருகில் வைத்துத் தேரையை அப்புறப்படுத்தலாமென்று யோசனை கூறினான். தன்வந்திரி காளிதாஸன் புத்தியைப் புகழ்ந்து ஒரு பாத்திரத்தில் ஜலத்தை வைத்து சலசலவென்று சப்தம் செய்தார். ஜல சப்தத்தைக் கேட்ட தேரை ஜலத்தில்



தாவிற்று. உடனே தன்வந்திரி அரசன் கபாலத்தை முன்போல் வைத்து சிகித்ஸை செய்து ரணம்கூடத் தெரியாமல் செய்து விட்டார். அரசன் கண் விழித்தவுடன் தன்வந்திரி காஸிதாஸனால் அரசன் காப்பாற்றப்பட்டதாகக் கூறிப் பதிலுரைக்குமுன் மறைந்துவிட்டார்.